# ...லா தமிழ் வாசகம்



புத்தகம் II—பகுதி II






ஆசிரியர் :
T. S. உமாபதி, M.A., L.T.

பதிப்பாசிரியர் :
வித்துவான்
M. V. வேணுகோபாலப் பிள்ளை






...சலம் அண்டு கம்பேனி
...செட்டித்தெரு, சென்னை 1.

# லீலா தமிழ் வாசகம்

## இரண்டாம் புத்தகம்

[இரண்டாம் படிவம்—சிறப்புப் பகுதி]

[26-6-51ல் கல்வி இலாக்கா அதிகாரி அவர்களால் வெளியிடப் பெற்ற பாடத் திட்டத்தைத் தழுவி எழுதப்பட்டது.]

ஆசிரியர் :

T. S. உமாபதி, M.A., L.T., (Dip. in Geog.)

தலைமை ஆசிரியர், சி. அப்துல் ஹக்கிம்
இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி, சென்னை.

பதிப்பாசிரியர் :

வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை



M. சேஷாசலம் அண்டு கம்பெனி

7, சுங்குராம செட்டித் தெரு, சென்னை–1

 1951 [விலை 0–12–0

# முகவுரை

லீலா தமிழ் வாசகம் என்னும் பெயருடன் வெளியிடப் பெறும் தமிழ்ப்பாட நூல் வரிசையில் இஃது இரண்டாம் புத்தக-மாகும். இது சென்னைக் கல்வி இலாக்கா அதிகாரியவர்களால் 26-6-51 லும், 21-8-51 லும் வெளியிடப் பெற்ற பாடத் திட்டங்-களை முற்றிலும் தழுவி ஆக்கப் பெற்றுள்ளது.

இதன்கண் தமிழைப் பிரதேச மொழியின் முதற்பகுதியாக மட்டும் கற்பவர்க்குரிய பொதுப் பகுதியும், முதற்பகுதியோடு இரண்டாம் பகுதியும் கற்பவர்க்குரிய சிறப்புப் பகுதியும் இடம் பெற்றுள்ளன. பொதுப் பகுதிக்கெனக் குறிக்கப்பட்டுள்ளபடி 80 பக்கங்கள் கொண்ட உரைநடைப் பாடங்களும், 200 வரிகள் கொண்ட செய்யுட்பாடங்களும், சிறப்புப் பகுதிக்கெனக் குறிக்கப்-பட்டுள்ளபடி 50 பக்கங்கள் கொண்ட உரைநடைப் பாடங்களும், 100 வரிகள் கொண்ட செய்யுட்பாடங்களும் இப்புத்தகத்தில் முறையே முதற்பகுதி எனவும், இரண்டாம் பகுதி எனவும் தனித்-தனி தரப்பட்டுள்ளன.

அன்றியும், பாடத் திட்டத்திற் சுட்டியுள்ளபடி பல்லார்டு (Ballard), ரென், மார்ட்டின் (Wren and Martin) முதலிய ஆங்கில நூலாசிரியர்கள் தங்கள் நூல்களில் கொடுத்துள்ள பயிற்சிகளைத் தழுவி, ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அகராதி பார்த்துப் பொருள் அறிதற்குரிய பயிற்சிகளும், பொருள்கோட் பயிற்சிகளும் (Comprehension Exercises), மொழிப் பயிற்சி-களும் (Language Exercises), இலக்கணப் பயிற்சிகளும் (Grammar Exercises), கட்டுரைப் பயிற்சிகளும் (Composition Exercises), மாணவர், மாணவியரின் மனத்திட்பத்துக்கு ஏற்றவாறு தரப்பட்டுள்ளன.

இப்பயிற்சிகள் எடுத்துக்காட்டுக்களேயன்றி முடிவானவை அல்ல. இவற்றை மாதிரிகளாகக் கொண்டு மேலும் அதிகமான பயிற்சிகளைத் தேவைக்குத் தக்கபடி ஆசிரியர்கள் அமைத்துக்-கொள்ளலாம்.

இந்நூல் அச்சேறுங்கால் ஏடுகளைப் பார்வையிட்டு இன்றியமையாத் திருத்தங்களைச் செய்து இதனைச் சிறக்கச் செய்த எனது மதிப்புக்குரிய நண்பர் உயர்திரு. வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கு எனது உளமார்ந்த நன்றியை உரிமைப்படுத்துகிறேன்.

சென்னை,<br>10-10-'51.

த. சே. உமாபதி

## உள்ளுறை

# லீலா தமிழ் வாசகம்

## இரண்டாம் புத்தகம்—இரண்டாம் படிவம்



## சிறப்புப் பகுதி

### உரைநடைப் பாடங்கள்



### 1. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும் ஆழ்வார்களும்–I

1. தமிழ் நாட்டில் தொன்று தொட்டு நிலை-பெற்றுள்ள சமயங்களுள் ஒன்று **வைணவம்.** பண்டைக் காலத்தில் தமிழகம் **குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை** என்னும் நிலப்பாகுபாடு-களை உடையதாய் இருந்தது. இந்நிலங்களுள் முல்லைக்குக் கடவுள் **திருமால்** என்பதனை வலியுறுத்த எழுந்தது **'மாயோன் மேய காடுறை உலகம்'** என்ற தொடர்; தமிழ் நாட்டின் எல்லையைக் குறிக்க எழுந்தது, **'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்'** என்னும் சொற்-றொடர். இவற்றால் நெடுங்காலத்துக்கு முன்னரே தமிழ் நாட்டில் திருமால் வணக்கம் நிலைபெற்றிருந்தது என்-பதனை நாம் தெள்ளிதின் அறிகிறோம். இங்ஙனமே சைவமும் தமிழகத்தில் தழைத்தோங்கி நின்றது. அக்-

காலத்தில், வட நாட்டில் சமணமும் பௌத்தமும் தோன்றித் தென்னுட்டிற்பரவத் தொடங்கிய காலத்தில், தமிழ் நாட்டு மன்னர் சிலரும், பிறரும் அப்புதிய மதங்களை மேற்கொள்ளலாயினர். எனவே, சைவமும் வைணவமும் சிறப்புக் குன்றி நிலை தளரலாயின. அத்தருணத்தில் **நாயன்மார்கள்** தோன்றிப் பத்திச்சுவை மலிந்த பாக்களைப் பாடிச் சைவத்தை நிலைநாட்டத் தொண்டாற்றினுர்கள். அங்ஙனமே வைணவத்துக்குத் தொண்டாற்றிய பத்திமான்கள் **ஆழ்வார்கள்.** ஆழ்வார் பன்னிருவர். **பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார்** என்பன அவர்கள் திருநாமங்கள்.

2. பொய்கையார், பூதத்தார், பேயார் என்னும் மூவரும் '**முதலாழ்வார்** எனப்படுவர். திருமழிசையாழ்வாரும் இவர்கள் காலத்தவரே. இம்மூவரும் திருமழிசையாழ்வாரைக்காட்டிலும் வயதில் முதிர்ந்தவர். மற்றைய ஆழ்வார்கள் இந்நால்வருக்கும் பிற்காலத்தவர்கள்.

3. **பொய்கையார், காஞ்சீ புரத்தில்** உள்ள விஷ்ணு ஸ்தலங்களுள் ஒன்ருகிய **திருவெஃகாவில்** தோன்றினுர்; இளமையிலேயே கல்வியிற்சிறந்து, திருமகள் நாதனுக்குத் தொண்டு புரிவதையும், அவர் புகழ் பாடுவதையும், அவர் திருத்தலங்களைத் தரிசிப்பதையும் தம் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து வரலாயினுர்.

4. **பூதத்தார்,** இக்காலத்தில் **மகாபலிபுரம்**

என வழங்கும் **திருக்கடன்மல்லையில்** அவதரித்தவர். திருக்கடன்மல்லையில் திருமால் பள்ளி கொண்ட




திருக்கோலத்தில் இருக்கின்றார். ஆனால், பிற தலங்களில் உள்ள பள்ளிகொண்ட கோலத்துக்கும் இதற்கும் ஒரு வேற்றுமை உண்டு: பிற தலங்களில் பாம்பணையிற் பள்ளி கொண்ட கோலமே காட்சியளிக்கும். இங்கு மட்டும் பாம்பணையின்றித்தரையிலேயே பள்ளி கொண்டிருத்தலின், இத்தலத்திற்குத் '**தலசயனம்**' என்னும் பெயர் வழங்குவதாயிற்று. இத்தகைய தலத்திற்பிறந்த **பூதத்தார்** கல்வியிற்சிறந்தவராய், மலர் மகள் மார்பரை மனமாரச் சிந்திப்பதும் வாயார வாழ்த்துவதும் தம் கடமையாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

5. **பேயார்**, தொண்டை நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகிய **திருமயிலையில்** தோன்றியவர். இவரும் மற்ற இருவரைப் போலவே பூமகள் நாதரின் பொற்பாதங்களில் தமது சிந்தையை இருத்தித் திரு-

மாலின் திருத்தலங்களைத் தரிசிப்பதும் பாமாலைகள் சூட்டுவதும் தமது வாழ்க்கையின் நோக்கங்களாகக் கொண்டு வாழ்ந்து வரலாயினர்.

6. இம்மூவரும் இங்ஙனம் இருந்த காலத்தில் இப்பெரியார்களின் திருவாக்கால் ஞானத்தையும் பத்தியையும் மக்கள் மனத்தில் உண்டாக்கத்தக்க நூல்களைத் தோற்றுவிக்க வேண்டுமென்று திருவுளம் கொண்டார் திருமகள் மணாளர். இறைவரின் எண்ணப்படி இம்மூவரும் ஒரு நாள் **திருக்கோவலூர்** என்னும் விஷ்ணுஸ்தலத்தை ஒருவரையொருவர் அறியாமலே வந்து அடைந்தனர்; நாள் முழுவதும் கோவிலில் ஒருவரையொருவர் காணாமலே தங்கி இருந்து ஆண்டவரை வாயார வாழ்த்தி வணங்கினர். இரவு வந்துற்றது. மூவரும் ஆலயத்தை விட்டு வெளிப்போந்து, படுப்பதற்கு இடந்தேடத் தொடங்கினர். இந்நிலையில் வானத்தில் மேகங்கள் திரண்டு மழை பெய்யும் போலக்காணப்பட்டது. பொய்கையார் ஒரு வைணவர் வீட்டை அடைந்து, அதன் மிகக் குறுகிய இடைகழியில் படுத்தார். இறைவரருளால் பூதத்தாரும் அதே வீட்டின் முன்னின்று, ‘அடியேன் கிடக்க இங்கு இடம் கிடைக்குமோ?’ என்று வினவினார். இடைகழியில் படுத்திருந்த பொய்கையார், ‘இங்கு ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; வாருங்கள்,’ என்றார். அங்ஙனமே பூதத்தார் அவ்விடைகழியை அடைந்து, அங்குப் பொய்கையாருடன் இருந்தனர். அந்நிலையில் மழையும் பெய்யத் தொடங்கிவிட்டது. பேயார் விரைந்து வந்து, அந்த இல்லத்தின் முன் நின்று, ‘சுவாமி, அடியேன் படுத்துக்கொள்ள சிறிது இடம் கிடைக்குமோ?’ என்று வினவினார். அது கேட்ட பொய்கையார்,

'சுவாமிகளே, இங்கு ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவராயின், நிற்கலாம். தேவரீரும் எழுந்தருளினால், மூவரும் நிற்கலாம்,'' என்று கூறி அவரை வரவேற்றார்.

7. மூவரும் இடைகழியில் நின்ற வண்ணம், ஒருவரையொருவர் உசாவி, இன்னாரென அறிந்து இன்புற்று, இறைவருடைய கலியாண குணங்களைப் புகழ்ந்து உரையாடிக்கொண்டிருந்தனர். அந்நிலையில் அங்கு ஒரு நெருக்கம் உண்டாயிற்று. தாம் மூவரேயன்றி, நான்காமவர் ஒருவரும் தம்மிடையே இருப்பது போல அம்மூவரும் உணர்ந்தனர். அப்போது பேரிருளும் பெருமழையும் உண்டாயினமையால், அந்தப் பத்தி சிரேட்டர் தம் ஞானமாகிய விளக்கின் துணைக்கொண்டு மனமாகிய கண்ணால் அங்கு நான்காமவராய் எழுந்தருளி நெருக்கியவர் கருமுகில் வண்ணராகிய பரந்தாமரே என்பதை அறிந்தனர்; அவர் தந்தருளிய காட்சியில் மனம் பதிந்து, பத்தி வசத்தராய் நின்றனர். பேயார் தாம் கண்ட காட்சியை,

> '' திருக்கண்டேன் ; பொன்மேனி கண்டேன் ; திகழும்
> அருக்கன் அணிநிறமுங் கண்டேன் ;—செருக்கிளரும்
> பொன்னாழி கண்டேன் ; புரிசங்கம் கைக்கண்டேன் ;
> என்னாழி வண்ணன்பால் இன்று !''

என்று கூறி மகிழ்ந்தார்.

8. அப்போது அம்மூவரும் முகில் வண்ணரின் கருணையில் மூழ்கியவராய்ப் பாமாலை சூட்டிப் பரமரைத் தொழுதனர். அவர்களுள் முதலில் பொய்கையார், '**வையம் தகளியா வார்கடலே நெய்யாக**' என்று தொடங்கி, நூறு பாக்களைக் கொண்ட ஓர் அந்தாதியைப் பாடி முடித்தார். முடிந்த

பாட்டின் கடைசியில் உள்ள எழுத்தையோ, சொல்லையோ, தொடரையோ மறு பாட்டின் முதலில் அமைத்துப் பாடப்படுவது **அந்தாதி** எனப்படும். பொய்கையார் பாடி முடித்த பின்னர், பூதத்தார், '**அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக**' என்று தொடங்கி ஓர் அந்தாதியை அருளினர். பிறகு, பேயார், '**திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்**' எனத் தொடங்கி நூறு பாட்டுக்களைக் கொண்ட ஓர் அந்தாதியைப் பாடி முடித்தார்.

9. இங்ஙனம் இவர்கள் பாடியவற்றுள், முதலில் எழுந்தது பொய்கையார் அருளிய அந்தாதியாதலால், அது **முதற்றிருவந்தாதி** என வழங்கி வருகின்றது. பூதத்தார் பாடியது **இரண்டாந்திருவந்தாதி** எனவும், பேயார் இயற்றிய அந்தாதி **மூன்றுந்-திருவந்தாதி** எனவும் வழங்கப்படுகின்றன. இங்ஙனம் முதலாழ்வார் மூவரும் தமிழ் நாட்டின்கண் உள்ள திருமாலின் திவ்விய தலங்களைத் தரிசித்து, பத்தி ததும்பும் பாக்களை இயற்றி, வைணவ சமயத்-துக்கு அரிய தொண்டாற்றி, ஆண்டவர் திருவடிகளை அடைந்தனர்.

10. **திருமழிசை ஆழ்வார்** தொண்டை நாட்-டில் கடலுக்கு மேற்கிலும், கச்சியம்பதிக்கு வடகிழக்-கிலும் உள்ள '**திருமழிசை**' என்னும் திருப்பதியில் **பார்க்கவ முனிவருக்கு** மைந்தராய் அவதரித்து, அத்திருப்பதியில் வாழ்ந்து வந்த **திருவாளர்** என்ப-வராலும் அவர் மனைவியார் **பங்கயச் செல்வியா**-ராலும் வளர்க்கப் பெற்றவர். இவர் இளமையில் தமிழ்க் கலையனைத்தும் பயின்று, சமணம், பௌத்-தம், சைவம் ஆகிய சமய நெறிகளை நன்கு ஆய்ந்து, இறுதியில் பேயாழ்வாரால் திருமாலின் திறமறிந்து,

வைணவ சமயத்தைத் தழுவினர் என்பர். இவர் முற்றும் துறந்த முனிவராய்ப் பத்தி நெறியைச் சார்ந்து யோகம் புரிந்து, சிவபெருமானுல் **பத்தி–சாரர்** என்னும் பெருமைக்குரிய திருநாமத்தைப் பெற்ருர். இவரை அன்புடன் வளர்த்த தாய் தந்தை–யரின் அருமைப் புதல்வரான **கணிகண்ணர்** இவருடன் நிழல் போன்றிருந்து இவருக்குத் தொண்–டாற்றி வந்தார்.

11. திருமழிசை ஆழ்வார் ஒரு சமயம் பொய்கை யாழ்வாரின் அவதாரத் தலமாகிய திருவெஃகாவைத் தரிசிக்கச் சென்று, அங்குத் தங்கியிருந்தார். அப்–போது கணிகண்ணர் பிச்சையேற்றுத் தம்மாசிரி–யரை உண்பித்துத் தாமும் உண்டு களித்திருந்தார். திருவெஃகாவில் வாழ்ந்த முதியவள் ஒருத்தி, தினந்–தோறும் திருமழிசையாழ்வார் தங்கியிருந்த இடத்தை அலகிட்டுச் சுத்தம் செய்யும் தொண்டைச் செய்து வந்தாள். ஒரு நாள் அவள்பால் கருணை கொண்ட ஆழ்வார், அவளுக்கு அவள் விரும்பியபடி இளமைப் பருவத்தை நல்கியருளினர். அச்செய்தி கேட்ட கஞ்சியை ஆண்ட பல்லவ மன்னன், கணிகண்ணர் தனது மாளிகைக்குப் பிச்சை ஏற்க வந்த போது அவ ரைக் கண்டு, "பெரியீர், நுமது திருவாக்கால் என்மீது ஒரு பாட்டிசைக்க வேண்டும்!" என்று வேண்டினன். கணிகண்ணர், மானிடரைப் பாடும் வழக்கம் தமக்–கில்லை எனக் கூறி மறுத்தனர். அது கேட்டுப் பல்லவன் சினம் கொண்டு, கணிகண்ணர் அப்போதே தனது நாட்டை விட்டு அகல வேண்டும் என்று உத்தரவிட்டான். உடனே கணிகண்ணர் திருமழிசை ஆழ்வாரை அடைந்து, நடந்தவற்றைக் கூறி, அவ்–விடம் விட்டுப் புறப்பட்டார்.

12. அது கேட்ட திருமழிசையாழ்வார், "கணிகண்ணரே, நீர் இவ்விடத்தை விட்டுப் போக, நாம் இங்கிருக்க வேண்டிய அவசியம் இல்லை. இதோ நாமும் உம்முடன் வருகின்றோம்; நம்மோடு நம் இறைவரையும் அழைத்துச் செல்வோம்," என்று கூறிக் கோவிலை அடைந்து,

"கணிகண்ணன் போகின்றான் ; காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீகிடக்க வேண்டா ;—துணிவுடைய
செந்நாப் புலவனியான் செல்கின்றேன் ; நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்."

என்னும் பாசுரத்தைப் பாடினார். பத்திசாரர் பெருமையினை உலகத்துக்குணர்த்தத் திருவுளங்கொண்ட திருமாலின் திருவுருவம், அக்கோவிலினின்றும் மறைந்தது. உடனே அவ்வூர் பொலிவிழந்து காணப்பட்டது. அது கண்ட நகரமக்கள், அரசனுக்கு அதனை அறிவித்தார்கள். அரசன் அமைச்சரை அழைத்து ஆராய்ந்து, உண்மையையுணர்ந்தான்; உடனே அமைச்சரும் பிரதானியரும் குடிமக்களும் பின் தொடரச் சென்று, நகரத்துக்குப் புறத்தே தங்கி இருந்த கணிகண்ணரையும் ஆழ்வாரையும் வணங்கித் தன் குற்றத்தை மறந்து தன்னை மன்னித்துக் கச்சிப்பதிக்கு எழுந்தருள வேண்டுமெனப் பிரார்த்தித்தான். அவன்பால் கருணை கொண்ட கணிகண்ணர், மீண்டும் கச்சிக்கு வரும்படி தம் குருவை வேண்டினார். அவரும் அதற்கியைந்து,

"கணிகண்ணன் போக்கொழிந்தான் ; காமருபூங் கச்சி
மணிவண்ணா ! நீகிடக்க வேண்டும் !—துணிவுடைய
செந்நாப் புலவன் செலவொழிந்தேன் ; நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்விரித்துக் கொள்."

என்னும் செய்யுளைப் பாடினார். உடனே திருமாலின்

திருவுருவம் கோவிலில் அமைந்தது. இதனுல் திருவெஃகாவில் உள்ள திருமாலுக்குச் '**சொன்ன வண்ணம் செய்த பெருமாள்**' என்னும் பெயரும், கணிகண்ணரும் ஆழ்வாரும் தங்கி-யிருந்த இடத்துக்கு '**ஓரிரவு இருக்கை**' என்னும் பெயரும் வழங்கி வருகின்றன.

13. இங்ஙனம் திருமழிசை ஆழ்வார் திருமாலின் திருத்தலங்களைத் தரிசித்தும், ஆங்காங்குத் தங்கி யோகம் புரிந்தும் காலம் கழித்து வந்தார். இவர் **திருவல்லிக்கேணி**யில் யோகத்தில் இருந்த போது முதலாழ்வார் மூவரும் அங்கு வந்து இவரைக் கண்டு, அளவளாவிச் சென்றனர். பிறகு திருமழிசை ஆழ்வார் கும்பகோணம் சென்று வாழ்ந்து வர-லாயினர். நூற்றிருபது பாக்களை உடைய **திருச்-சந்த விருத்தம்** என்னும் நூலும், தொண்ணூறு கவி-களை உடைய **நான்முகன் திருவந்தாதி** என்னும் நூலும் இவரால் அருளிச்செய்யப்பெற்ற நூல்-களாகும்.

## பயிற்சி :

**1. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—**

தொன்றுதொட்டு, சமயம், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்-தல், பாலை, ஆயிடை, தெள்ளிதின், மலிந்த, திருநாமங்கள், திரு-மகள் நாதர், குறிக்கோள், பூமகள்நாதன், வந்துற்றது, வெளிப்-போந்து, கிடப்பதற்கு, இடைகழி, உசாவி, வியந்தார், அந்தாதி, முற்றும் துறந்த, பாட்டிசைக்க, பொலிவிழந்து.

**2. வாக்கியத்தில் அமைக்க :—**

தொன்றுதொட்டு, தழைத்தோங்கி, மனமார வாயார, வெளிப்-போந்து, எழுந்தருள, முற்றும் துறந்த, பொலிவிழந்து.

3. விடை எழுதுக :—

(அ) பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டில் இருந்த நிலப் பாகுபாடுகள் எவை ?

(ஆ) பன்னிரண்டு ஆழ்வார்களின் பெயர்கள் யாவை ?

(இ) முதலாழ்வார் என்பவர் யாவர்? அவர் காலத்தவராய வேெருருவர் யார் ?

(ஈ) 'தலசயனம்' என்னும் பெயர் எதற்கு வழங்குகிறது ? காரணம் யாது ?

(உ) முதலாழ்வார் மூவரும் எந்தக் காலத்தில், எங்குக் கூடினர் ?

(ஊ) திருவந்தாதிகள் எத்தனே ? அவை யாவை ?

(எ) 'திருக்கண்டேன்' என்னும் தொடக்கத்தையுடைய செய்யுளில் காணப்படும் கடவுள் காட்சியைச் சுருக்கமாக எழுதுக.

(ஏ) கணிகண்ணர் யார் ? அவருடைய குரு யார் ? அவர்கள் கச்சியில் செய்த அற்புதம் என்ன ?

4. வாக்கியமாக்குக :—

(அ) பழைய வைணவம் ஒன்று நாட்டு நமது சமயங்களில்

(ஆ) பாடி நாட்டில் தேவாரம் தமிழ் நாட்டியவர் நாயன்மார் நிலே சமயத்தை சைவ ஆவர்

(இ) வைணவத்துக்கு போலவே ஆழ்வார்கள் நாயன்மார் கள் தொண்டு செய்தார்கள்

## இலக்கணம் :

## 1. எழுத்து

1. கீழ் வரும் எழுத்துக்களே உச்சரிக்க :—

1. அ, இ, உ, எ, ஒ—குறில்
2. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ ஔ—நெடில்

முதல் வரிசையில் உள்ள எழுத்துக்களேயும், இரண்டாம் வரிசையில் உள்ள எழுத்துக்களேயும் உச்சரித்துப் பார்க்க.

முதல் வரிசையில் உள்ள எழுத்துக்களேக்காட்டிலும் இரண்டாம் வரிசையில் உள்ள எழுத்துக்கள் சற்று நீண்டு ஒலிக்கின்றன.

எனவே, முதல் வரிசையில் உள்ள குறுகிய ஓசை உடைய எழுத்துக்கள் ஐந்தும் குறில் அல்லது குற்றெழுத்து எனப்படும். இரண்டாம் வரிசையில் உள்ள நீண்ட ஓசை உடைய எழுத்துக்கள் ஏழும் நெடில் அல்லது நெட்டெழுத்து எனப்படும்.

2. கீழ் வரும் எழுத்துக்களை உச்சரிக்க :—

1. க், ச், ட், த், ப், ற்—வல்லினம்
2. ங், ஞ், ண், ந், ம், ன்—மெல்லினம்
3. ய், ர், ல், வ், ழ், ள்—இடையினம்

முதல் வரிசையில் உள்ள எழுத்துக்களை உச்சரித்தால், அவை வலிந்த ஓசை உடையவை என்பது தெரிகிறது. எனவே, வலிந்த ஓசை உள்ள ஆறு எழுத்துக்களும் வல்லினம், வலி, வன்கணம் எனப் பெயர் பெறும்.

இரண்டாவது வரிசையில் உள்ள எழுத்துக்களை உச்சரித்தால், அவை முதல் வரிசையில் உள்ளவற்றின் ஒலியைக்காட்டிலும் மெல்லிய ஓசை உடையவை என்பது தெரியும். எனவே, அந்த ஆறெழுத்தும் மெல்லினம், மெலி, மென்கணம் எனப்படும்.

மூன்றும் வரிசையில் உள்ள எழுத்துக்களை உச்சரித்தால், அவை மேலேயுள்ள இரண்டுவகை எழுத்துக்களின் ஓசைக்கும் இடைப்பட்ட ஓசை உடையவை என்பது தெரியும். எனவே, அந்த ஆறெழுத்தும் இடையினம், இடை, இடைக்கணம் எனப் பெயர் பெறும்.

## 2. சொல்

### பகுபதம், பகாப்பதம்:

1. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

1. மலை, பொன்—பெயர்ப்பகாப்பதங்கள்
2. செய், இறங்கு—வினைப்பகாப்பதங்கள்
3. மற்று, உடன்—இடைப்பகாப்பதங்கள்
4. கழி, நனி—உரிப்பகாப்பதங்கள்
5. மலையன், பொன்னன்—பெயர்ப்பகுபதங்கள்
6. செய்தான், இறங்குகிறான்—வினைப்பகுபதங்கள்

ஐந்தாம் வரிசையில் உள்ள சொற்களைக் கவனி; அவை பெயர்ச்சொற்கள். அவற்றை, 'மலை + அன்; பொன் + அன்' எனப் பிரிக்கலாம்.

ஆறும் வரிசையில் உள்ள சொற்களைக் கவனி: அவை வினைச்சொற்கள். அவற்றையும் 'செய் + த் + ஆன்; இறங்கு + கிறு + ஆன்' எனப் பகுக்கலாம். இவ்வாறு பகுக்கப்படும் பதங்கள் பகுபதங்கள் எனப்படும்.

இவற்றுள் பகுக்கத்தக்க பெயர்ச்சொற்கள் பெயர்ப்பகு-பதங்கள் எனப்படும். இங்ஙனமே, பகுக்கத் தக்க வினைச்-சொற்கள் வினைப்பகுபதங்கள் எனப்படும்.

இனி, முதல் வரிசையில் உள்ள சொற்களைக் கவனிக்க. அவை பெயர்ச்சொற்கள்; ஆனால், பகுக்க முடியாதவை. இரண்-டாம் வரிசையில் உள்ள சொற்கள் வினைச்சொற்கள். அவை-களும் பகுக்க முடியாத சொற்களே.

மூன்றும் வரிசையில் உள்ளவை இடைச்சொற்கள். அவை-களும் பகுக்க முடியாதவைகளே.

நான்காம் வரிசையில் உள்ள சொற்கள், உரிச்சொற்கள். அவைகளும் பகுக்க முடியாதவைகளே.

இவ்வாறு பகுக்க முடியாத பெயர், வினை, இடை, உரி என்னும் நான்கு வகையான பதங்களும் பகாப்பதங்கள் எனப்-படும்.

குறிப்பு: பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் பகுபத-மாகவும், பகாப்பதமாகவும் இருக்கும். இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பகுபதங்களாகா; பகாப்பதங்களாகவே இருக்கும்.



# 2. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும் ஆழ்வார்களும்—II

1. முன் பாடத்தில் முதலாழ்வார் மூவரைப் பற்றியும், அவர் காலத்து வாழ்ந்த திருமழிசை ஆழ்வாரைப் பற்றியும் அறிந்தோம். இப்பாடத்தில் மற்ற ஆழ்வார்களின் வரலாற்றைச் சுருக்கமாக அறிவோம் :



2. **குலசேகர ஆழ்வார்** என்பவர் **திடவிரதர்** என்ற சேர மன்னரின் புதல்வர். இவர் இளமையிலேயே இனிது பயின்று, கல்வி கேள்விகளில் வல்லவராயும், வீரராயும் திகழ்ந்தார். அரியணை ஏறி அரசு புரிந்துவந்த இவர், துளவத்தாமருக்குத் தொண்டாற்றி வந்தார். ஒரு நாள் இவர் இராமாயணப் பிரசங்கம் கேட்டுக்கொண்டிருந்தார் ; 'இராமன் தனியனாய் நின்று கரனை எதிர்த்துப் போர் புரிந்தான் !' என்று பாகவதர் சொல்லக் கேட்ட போது மெய்ம்மறந்து இராமனுக்குத் துணைபுரியத் தம் படைகளைத் திரட்ட உத்தரவிட்டாராம். உடனே, 'கரன் இராமனால்

கொல்லப்பட்டான் !' என்ற செய்தியைப் பிரசங்கியார் கூறக் கேட்டுப் படை திரட்டும் முயற்சியைக் கை விட்டாராம். இவர் நாளடைவில் பத்தி மேலிட்டு, அரசாட்சியில் வெறுப்புற்றுத் தம் மைந்தருக்குப் பட்டம் கட்டிவிட்டு, திருமாலின் தொண்டர் குழாத்-துடன் கூடித் திருப்பதிதோறும் சென்று, பதிகங்சள் பாடி வந்தார். இவர் பாடிய நூற்றைந்து கவிகள் '**பெருமாள் திருமொழி**' என்னும் பெயருடன் விளங்குகின்றன. இவர் பெரிய பெருமாளாகிய இராமபிரானிடம் பேரன்பு கொண்டவராதலின், இவ-ருக்குப் '**பெருமாள்**' என்னும் திருநாமமும் வழங்குவதாயிற்று.

3. **பெரியாழ்வார்** என்பவர், **வில்லிபுத்தூ**ரில், **முகுந்தபட்டர்** என்ற முன்குடுமிச் சோழிய வேதிய-ருக்குப் புதல்வராய்ப் பிறந்தார் ; இளமையிற் கல்வி பயின்று, திருமாலின் அடியவரானார். இவர் **பூங்கா** ஒன்று அமைத்து, அதில் நீர்ப்பூ, நிலப்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ என்னும் நால்வகைப் பூக்களையும் உண்-டாக்கி, அவற்றால் அழகிய மாலை தொடுத்துத் தினந்-தோறும் திருமாலுக்குச் சார்த்தி வந்தார்.

4. அக்காலத்திற் பாண்டி நாட்டை ஆட்சி புரிந்து வந்த பாண்டிய மன்னன், வேதத்தின் முடி-வாய் உள்ள உண்மைப் பொருளை உணர ஆவலுற்றுத் தனது சபையில் ஒரு தோரண கம்பத்தை நாட்டி-னான் ; அதிற் பொற்காசுகள் நிரப்பப் பெற்ற கிழி ஒன்றினைக் கட்டினான் ; 'வேதத்தின் உண்மைப் பொருளை எடுத்துரைத்து, இக்கிழி தானே இற்று விழச் செய்பவர் இதனைப் பெறலாம்,' என்று தனது நாடு முழுமையும் பறையறைவித்துத் தெரிவிக்கச் செய்தான். பலர் முயன்றும் அக்கிழி அறுபடாமல்

இருந்தது. இவர் திருமாலின் திருவருளால் சொற்பொழிவாற்றியதால் அக்கிழி இருந்த கம்பம் வளைந்து கிழியை இவர் முன் சமர்ப்பிக்க, இவர் அதனை அறுத்து எடுத்துக்கொண்டார். அது கண்டு வியப்புற்ற **வல்லபதேவன்** என்ற பாண்டியன் பெரியாழ்வாரைத் தன் பட்டத்து யானைமீதேற்றி, உலா வரச் செய்தான். பெரியாழ்வார் நானூற்றெழுபத்து மூன்று பாசுரங்களைப் பாடியுள்ளார். இவருக்குப் பிள்ளைப் பெயராய் அமைந்தது **விஷ்ணு சித்தர்** என்னும் திருநாமம். பாண்டியன் இவரைப் '**பட்டர் பிரான்**' என்று வழங்கிப் பெருமைப்படுத்தினன். வைணவ பத்தர்கள் இவரைப் '**பெரியாழ்வார்**' என்று போற்றினர்கள்.



5. **ஆண்டாள்** என்னும் பத்தி மிக்க பைங்கொடி, பெரியாழ்வாரின் மலர்ச்சோலையில் திருத்துழாய்ச் செடி ஒன்றின் கீழ்ப் பச்சிளங்குழவியாய் அழுதுகொண்டிருந்த போது, பட்டர் பிரான் அதனைக் கண்டு எடுத்து வந்து, **கோதை** என்ற பெயர் சூட்டி வளர்த்து வந்தார். கோதையார் வளம்பெற வளர்ந்து, கற்கத் தகுவன கற்று, தம் தந்தையார் திருமாலுக்குத் தொடுத்து வைத்த மாலைகளைத் தினந்தோறும் தாம் சூடிக்கொண்டு, தம் ஒப்பனையை ஆடி முன் கண்டு ஆனந்தித்த பின்பு மாலையைக் களைந்து இருந்த இடத்திலேயே வைப்பது வழக்கம். பிறகு தந்தையார்

அம்மாலைகளைக் கொண்டு சென்று ஆண்டவருக்கு அணிவிப்பார். பல நாட்கள் இவ்வாறு நடந்து வந்ததெனினும், ஒரு நாள் இதனைப் பெரியாழ்வார் கண்டு பெரிதும் வருந்திக் கோதையார் செயலைக் கண்டித்து, அன்று திருமாலுக்கு மாலை அனுப்பாதிருந்தார். அன்றிரவு நாராயணர் பட்டர் கனவில் தோன்றி, 'கோதை சூடிக் கொடுக்கும் மாலையே எமக்கு மகிழ்ச்சியளிக்கத் தக்கது!' என்று தெரிவித்து மறைந்தனர். அன்று முதல் கோதையார் சூடிக்கொடுத்த பின்னரே மாலை திருமாலுக்குச் சூட்டப்பெற்று வந்தது. இதனால், கோதையாருக்குச் **சூடிக்கொடுத்த நாச்சியார்** என்னும் பெயரும் வழங்கலாயிற்று.

6. பின்னர்க் கோதையார் திருவரங்கநாதரையே மணாளராக அடைய விரும்பி, இடையறாது மனம் வருந்தி நின்றார். அவர்பால் இரக்கம் கொண்ட இறைவர், பட்டர்பிரான் கனவில் தோன்றி, கோதையாரைத் திருவரங்கம் அழைத்துச் செல்லுமாறு தெரிவித்தார்; பாண்டிய மன்னனான வல்லபதேவன் கனவிலும் தோன்றிக் கோதையாரைத் திருவரங்கம் கொண்டு செல்வதற்குரிய எல்லா ஏற்பாடுகளையும் செய்யுமாறு பணித்தார்; அங்ஙனமே திருவரங்கத்தில் கோவில் அதிகாரிகள் கனவிலும் தோன்றி, சீவில்லிபுத்தூர் சென்று பெரியாழ்வாரின் பொற்கொடியைக் கொண்டு வருமாறு அருளினார். பின்னர்க் கோதையார் இறைவர் ஆணைப்படி திருமணக் கோலத்துடன் அரங்கநாதர் ஆலயத்துட்புகுந்து, அரவணையின்மீது கால் வைத்தேறி, அங்குள்ள மூர்த்தியைத் தழுவி மறைந்தார். தம் மகளார் இறைவருக்கு உரியவராயினமை கண்ட பட்டர் பிரான், '**என்னை இவள் ஆண்டாள்!**' என்று வியப்புற்றுக் கூறினார்.

இதனால், கோதையாருக்கு ஆண்டாள் என்னும் பெயரும் வழங்குவதாயிற்று. கோதையார் பாடியவை நூற்று நாற்பத்து மூன்று பாக்கள். அவை **திருப்பாவை, நாச்சியார் திருமொழி** என்னும் இரு நூல்களாய் வழங்குகின்றன.

7. **தொண்டரடிப் பொடியாழ்வார்,** சோழ நாட்டில் உள்ள **மண்டங்குடி** என்னும் ஊரில் **வேதவிசாரதர்** என்ற முன்குடுமிச் சோழியப் பார்ப்பனருக்கு மைந்தராய்ப் பிறந்தார். '**விப்பிர நாராயணர்**' என்பது இவரது பிள்ளைப் பெயராகும். இவர் தென்மொழி வடமொழி இரண்டிலும் வல்லவர். இவர் இலக்குமி நாதரிடம் ஈடுபாடு உடையவர். ஆதலால், திருவரங்கம் சென்று மலர்க்கா ஒன்றை அமைத்துத் திருமாலுக்குத் திருமாலை சார்த்தும் தொண்டினை மேற்கொண்டு வாழ்ந்து வந்தார். நாற்பத்தைந்து கவிகளை உடைய **திருமாலை** என்னும் நூலும், பத்துப் பாக்களையுடைய **திருப்பள்ளி எழுச்சி** என்னும் பகுதியும் இவரால் பாடப்பெற்றவை.

8. **திருப்பாண் ஆழ்வார்** என்பவர், சோழ நாட்டின் தலை நகரமாய் விளங்கும் பேறு பெற்ற உறையூரைச் சார்ந்த **பாணர் சே**ரியிற்பிறந்தார். நெடுங்காலத்துக்கு முன் பாணர் என்று வழங்கப் பெற்ற இனத்தவர், நமது தமிழ் நாட்டில் வாழ்ந்து வந்தனர். இசையுடன் பாட்டுப் பாடுவதும், அதற்குப் பொருந்த யாழ் என்னும் வீணை வாசிப்பதும் அவர்களுடைய குலத்தொழில்களாகும். இக்காரணத்தால், அவர்கள் **யாழ்ப்பாணர்கள்** என்றும் வழங்கப்பட்டார்கள். அவர்கள் இழிகுலத்தவர்களாகக் கருதப்பட்டார்கள். ஆதலால், தம்மை உயர்ந்தவர் எனக் கருதிய மரபினர் அவர்களைத் தீண்டுவதில்லை.

9. திருப்பாணுழ்வார் திருமாலுக்குத் தொண்டாற்றி உய்ய விரும்பினுர். ஆனுல், இழி குலத்தவராய இவர் கோவிலுட்செல்வதெப்படி? ஆதலால், இவர் நாள்தோறும் காலையில் காவிரியின் தென்கரையில் நின்று, திருவரங்கரின் திருக்கோவிலை நோக்கி யாழுடன் கலந்த இன்னிசைப் பாக்களைப் பாடித் தம்மை மறந்து சேவிப்பது வழக்கம். ஒரு நாள் திருவரங்கநாதருக்கு அருச்சனை செய்பவராகிய **உலோகசாரங்க முனிவர்**, காவிரியில் நீர் எடுக்கச் சென்ருர். அப்போது பாணர் இறைவரைச் சிந்தையில் எண்ணி மெய்ம்மறந்து நின்ருர். அதை உணராத உலோகசாரங்கர், பாணர் தம்மைக் கண்டும் ஒதுங்காமலிருக்கக் கண்டு, அவர் மீது ஒரு கல்லை வீசினுர். அக்கல் பாணர் நெற்றியிற்பட்டதனுல் குருதி வழிந்தது. பிறகு தீர்த்தம் கொண்டு திருக்கோவிலை அடைந்த உலோகசாரங்க முனிவர், திருவரங்கநாதரின் நெற்றியில் குருதி கசியக் கண்டு, காரணம் அறியாது திகைத்தார். அன்றிரவு அவர் கனவில் திருவரங்கநாதர் தோன்றிப் பாணரின் பெருமைகளைக்கூறி மறைந்தருளினுர். மறுநாட்காலையில் உலோகசாரங்கர் மற்ற வேதியருக்குப் பாணரைப் பற்றிய செய்தியைக் கூறி, அவரை அழைத்துக்கொண்டு காவிரிக்கரையை அடைந்தார். அங்கு வழக்கம் போல வந்திருந்த திருப்பாணரை வணங்கி, அவரை உலோகசாரங்கர் தமது தோளில் தூக்கிச் சென்று, திருவரங்கநாதரின் திருக்கோவிலினுள் விட்டார். அப்போது திருப்பாணுழ்வார், '**அமலனுதிப் பிரான்**' எனத்தொடங்கும் பாசுரம் முதலாகப் பத்துப் பாசுரங்களைப் பாடித் திருமாலைத் துதித்து அவர்தம் திருவுருவிற்கலந்து மறைந்தார்.

10. **திருமங்கை ஆழ்வார்** என்பவர் ஆலி-நாட்டைச் சேர்ந்த **திருக்குறையலூரில் ஆலி-நாடர்** என்பவர்க்குத் தனயராய்ப் பிறந்தார். இவர் பெற்றேர் இவருக்கு **நீலன்** என்ற பெயரைச் சூட்டி-னர். இவர் இளமையிலேயே கல்வியிலும், போர் முறைகளிலும் வல்லவரானுர். இவரது வீரத்தைக் கண்ட சோழ மன்னன், இவரைத் தன் படைத்தலைவ-ராக்கி, இவருக்குப் **பரகாலர், நாற்கவிப் பெருமாள்** என்னும் பட்டங்களை வழங்கிச் சிறப்பித்தான். இவர் **திருநாங்கூர்** என்னும் ஊரில் ஒரு மருத்துவரால் வளர்க்கப்பெற்று வந்த **குமுதவல்லி**யாரை மணக்க விரும்பினுர் ; அவ்வம்மையார் விருப்பப்படி வைணவ-ரானுர். பிறகு நாள்தோறும் ஆயிரம் பாகவதர்கட்கு அமுது படைப்பதாக வாக்களித்து அவ்வம்மையாரை மணந்தார். தாம் வாக்களித்தபடி செய்து வந்த இவர், தம் கைப்பொருள் குறைந்த பின் வழிப்பறியில் ஈடு பட்டுப் பாகவதர்களுக்கு அமுதளித்து வந்தார். இவர்பால் கருணை கொண்ட திருவரங்கநாதர் மணக்-கோலத்திற் சென்ற போது, அவரை வழிப்பறி செய்ய முயன்று, அவரால் ஞானேபதேசம் செய்யப் பெற்ருர். பின்னர்க் குமரி முதல் இமயம் வரை உள்ள திருமால் திருப்பதிகளைத் தம் மனைவியாருடன் சென்று தரிசித்துப் பதிகங்கள் பாடி வந்தார். ஆறு நூல்கள் இவரால் பாடப்பெற்றன. அவை **பெரிய-திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்-தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல்** என்பவை. இவருக்குத் **திருமங்கை மன்னர், கலியர்** என்னும் வேறு பெயர்களும் உண்டு.

11. **நம்மாழ்வார்** என்பவர், பாண்டி நாட்டில்

உள்ள **திருக்குருகூர்** என்னும் திருப்பதியில் **காரியார்** என்பவருக்கும் **உடைய நங்கையார்** என்பவருக்கும் மைந்தராய்த் தோன்றினர். இவருக்குப் பெற்ருேர் இட்ட பெயர் **மாறன்** என்பது. இவர் பிறந்தது முதல் பால் உண்ணுமலும், வாய் திறந்து அழாமலும், கண் திறவாமலும் இருந்தார்.




ஆதலால், இவர் பெற்ருேர் மிகக் கவன்று, இவரை இறைவர் திருக்கோவிலில் விட்டுப் பாதுகாத்து வந்தனர். திருமால் இவருக்குச் **சேனை முதலியார்** மூலம் ஞானேபதேசம் செய்வித்தார். ஆதலால், இவர் தமது பதினும் வயது வரையில் அக்கோவிலின் அருகில் ஒரு புளியமரத்தின்கீழ் யோகத்தில் அமர்ந்திருந்தார். பிறகு அங்கு வந்த **மதுரகவியா**–

ரைக் காணக் கண் திறந்து, அவரைத் தம் மாணவ-ராக்கிக்கொண்டார். இவரே ஆழ்வார் பன்னிருவ-ருள்ளும் சிறந்தவராகக் கருதப்படுகின்றார். இவருக்குக் **காரிமாறர், சடகோபர், பராங்குசர், ஆழ்வார்** என்னும் பெயர்களும் வழங்குகின்றன. ஆழ்வார் பன்னிருவர் இருப்பினும், 'ஆழ்வார்' என்னும் சொல் இவரை மட்டுமே குறிக்கும் என்பது அறியத் தக்கது. இவர் நான்கு நூல்களைப் பாடியருளினார். அவற்றுள் **திருவாய்மொழி** என்பது ஆயிரத்து நூற்றிரண்டு பாசுரங்களைக் கொண்டது.

12. **மதுரகவி ஆழ்வார்** என்பவர், **திருக்-கோளூரில்** முன்குடுமிச் சோழிய வேதியர் குலத்திற் பிறந்தவர். இவர் தென்மொழியையும் வடமொழி-யையும் நன்கு பயின்று, இனிய கவி பாடும் திறம் பெற்றிருந்தார். ஆதலால், இவருக்கு இப்பெயர் வழங்குவதாயிற்று. இவர் ஒரு சமயம் வடநாட்டில் உள்ள **அயோத்தியில்** இருந்த போது, ஒரு நள்-ளிரவில் பேரொளியொன்று தென்திசையில் தோன்-றியது. இவர் அவ்வொளி தெரிந்த திசை நோக்கி நடந்தார். அது பகலில் மறைவதும், இரவில் தெரிவதுமாய் இருக்க, இவரும் அதனை விடாது தொடர்ந்து வந்து, பாண்டி நாட்டில் உள்ள திருக்-குருகூரை அடைந்தார். அங்கு அவ்வொளி கோவி-லுள் மறைந்தது. மதுரகவியார் உட்சென்று பார்க்க, அங்கு யோகத்தில் அமர்ந்திருந்த நம்மாழ்வாரைக் கண்டார்; அவரை வணங்கி அவரால் உபதேசிக்கப்-பெற்று அவருடைய மாணவராயினார். இவர் நம்-மாழ்வாரையே கடவுளாகக் கருதி அவர்மீது பதினொரு பாக்கள் பாடினார்; விழாக்களும் நடத்தினார்.

13. இவ்வண்ணம் ஆழ்வார் பன்னிருவராலும்

ஆண்டவரைக் குறித்து ஆக்கப்பட்ட பாசுரங்கள் அனைத்தும் ஒன்ருகத் திரட்டப்பட்ட தொகுதியே **நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்** என்பது. இப்-பிரபந்தம் நான்கு பகுதிகளை உடையது. அவை **முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திரு-வாய்மொழி** என்பன. இவற்றுள் அடங்கியுள்ள பாசுரங்களின் தொகை மூவாயிரத்து எழுநூற்று எழுபத்தாறேயாகும். இவை அனைத்தும் மலர் மகள் மணுளரை முதற்கடவுளாகக் கொண்டு, பத்திச்சுவை சொட்டத் தூய தமிழில், படிப்பவர்க்கு இன்பம் பயக்கத்தக்கவையாய் இயன்றவை.

**பயிற்சி :**

**1. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—**

ஈண்டு, பூங்கா, தோரணக் கம்பம், கிழி, இற்று, உலா வர, ஒப்பனை, இடையருது, தென்மொழி, வடமொழி, குலத்தொழில், ஆராதனை, குருதி, ஞானேபதேசம், வழிப்பறி, கவன்று, இயன்-றவை, தூய.

**2. வாக்கியங்களில் அமைக்க :—**

பேரிருளும் பெருமழையும், தினந்தோறும், ஆங்காங்கு, கல்வி கேள்விகளில், நாளடைவில், ஆட்சி புரிந்து, மாலை தொடுத்து, பறையறைவித்து, அன்று முதல், நாள்தோறும், சென்ற போது, தொன்று தொட்டு.

**3. விடை எழுதுக :—**

(அ) குலசேகரர் சிறந்த பத்திமான் என்பதை எதனுல் அறியலாம்?

(ஆ) விஷ்ணு சித்தர் ஏன் 'பெரியாழ்வார்' என்று போற்-றப்பட்டார்?

(இ) கோதையாருக்கு வழங்கும் வேறு பெயர்கள் யாவை?

(ஈ) தொண்டரடிப்பொடியாழ்வாரின் பிள்ளைப் பெயர் யாது?

(உ) திருவரங்கநாதரின் நெற்றியில் ஏன் குருதி வழிந்து ஓடியது ?

(ஊ) திருமங்கை மன்னரின் பட்டப் பெயர்கள் யாவை ? இவர் எதனுல் வைணவரானுர் ?

(எ) 'நலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என்பதைப் பற்றி நீ அறிந்தவை யாவை ?

**4.** இப்பாடத்திலிருந்து கீழ் வருவனவற்றுக்கு மூன்று மூன்று உதாரணங்கள் தருக :—

| பகுபதம் | பகாப் பதம் | பெயர்ச் சொல் | வினைச் சொல் | இடைச் சொல் | உரிச் சொல் |
|---|---|---|---|---|---|
| | | | | | |

## இலக்கணம் :

### பகுதி, விகுதி, இடைநிலை :

**1.** கீழ் வருவனவற்றைக் கவனிக்க :—

பகுதி இடைநிலை விகுதி

1. அறி + ஞ் + அன்—அறிஞன்—பெயர்ப்பகுபதம்
2. செய் + த் + ஆன்—செய்தான்—வினைப்பகுபதம்

மேலே 'அறிஞன்' என்னும் பெயர்ச்சொல்லும், 'செய்தான்' என்னும் வினைச்சொல்லும், தனித்தனி, பகுதி, விகுதி, இடைநிலை என மூன்று உறுப்புக்களாகப் பிரிக்கப்பட்டு இருப்பதைக் கவனிக்க.

இவ்வாறு பகுபதங்களைப் பகுக்கும்போது, முதலில் நிற்கும் உறுப்புப் பகுதி எனப்படும். இதற்கு முதல் நிலை என்னும் பெயரும் உண்டு.

ஈற்றில் (கடைசியில்) நிற்கும் உறுப்பு விகுதி எனப்படும். இதற்கு இறுதி நிலை என்னும் பெயரும் உண்டு.

பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் நிற்கும் உறுப்பு இடை-நிலையாம்.

குறிப்பு :— வினைச்சொற்களில் உள்ள இடைநிலை காலத்தைக் காட்டும்.

2. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

1. செய்தான் —(செய் + த் + ஆன்)—த்
2. உண்டான்—(உண் + ட் + ஆன்)—ட்
3. தின்றான் —(தின் + ற் + ஆன்)—ற்
4. ஓடினான் —(ஓடு + இன் + ஆன்)—இன்

} இறந்த கால இடை நிலைகள்

செய்தான், உண்டான், தின்றான், ஓடினான் என்பவை வினைச்சொற்கள். வினைச்சொற்கள் காலத்தைக் காட்டும். இந்த நான்கு சொற்களும் இறந்த காலத்தைக் காட்டும் வினைச்-சொற்கள். இவை பகுபதங்கள். ஆதலால், மேலே காட்டியுள்ள-படி பகுதி, விகுதி, இடைநிலை என்னும் உறுப்புக்களாய்ப் பிரிக்-கப்பட்டு உள்ளன. இவற்றில் உள்ள இடைநிலைகள் இறந்த காலத்தைக் காட்டி நிற்கின்றன.

மனப்பாடம் செய்க :

த், ட், ற், இன் என்பன இறந்தகால இடைநிலைகள்.

3. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

இறங்குகிறான் (இறங்கு + கிறு + ஆன்)—கிறு
இறங்குகின்றான் (இறங்கு + கின்று + ஆன்)—கின்று
இறங்காநின்றான் (இறங்கு + ஆநின்று + ஆன்)—ஆநின்று
—நிகழ்கால இடைநிலைகள்

இறங்குகிறான், இறங்குகின்றான், இறங்காநின்றான் என்-பன வினைச்சொற்கள். இவை மூன்றும் நிகழ்காலத்தைக் காட்டுகின்றன. இவை பகுபதங்களாதலின், பகுதி, விகுதி, இடைநிலை என்று பிரிக்கப்பட்டுள்ளன. இவற்றில் உள்ள கிறு, கின்று, ஆநின்று என்னும் இடைநிலைகள் நிகழ்காலத்தைக் காட்டி நிற்கின்றன.

**மனப்பாடம் செய்க :**

**கிறு, கின்று, ஆநின்று என்பன நிகழ்கால இடை-நிலைகள்.**

4. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

தின்பான் (தின் + ப் + ஆன்)—ப் } எதிர்கால இடை-
ஒடுவான் (ஓடு + வ் + ஆன்)—வ் } நிலைகள்

தின்பான், ஓடுவான் என்பன வினைச்சொற்கள். இவை எதிர்காலத்தைக் காட்டுகின்றன. இவை பகுதி, விகுதி, இடை-நிலை என்னும் உறுப்புக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவற்றின் இடைநிலைகளான ப், வ் என்பன எதிர்காலத்தைக் காட்டுவன.

**மனப்பாடம் செய்க :**

**ப், வ் என்பன எதிர்கால இடைநிலைகள்.**

# 3. மதுரை மாநகரமும் மீனாட்சி கோவிலும்

1. **'விண் மறைக்கும் கோபுரம், வினை மறைக்கும் கோவில்கள்'** என்று **நாமக்கல் கவி-ஞர்** கூறியபடி நமது நாட்டுப் பண்டைப் புகழுக்குக் காரணமானவை கோபுரங்களும் கோவில்களுமே-யாகும். இத்தகைய கோவில்களுள் ஒப்புயர்வற்றதாய் விளங்குவது, மதுரைமா நகரின் நடுநாயகமாய் விளங்கும் **மீனாட்சி கோவி**லேயாகும். இக்கோவில் இடம் பெற்றுள்ள மதுரையைப்பற்றி முதலில் தெரிந்துகொள்வோம் :

"தேன்பெருகும் சோலைத் தென்னன் வளநாடு
கனியுதிரும் சோலைக் கனமதுரை நன்னாடு ;
வாழை வடக்கீனும் ; வான்கமுகு மேற்கீனும் ;
கரும்பும் இளநீரும் கண்திறந்து மடைபாயும் ;
கட்டுக் கலங்காணும் ; கதிர்உழக்கு நெல்காணும் ;
அரிதாள் அறுத்துவர மறுதாள் பயிராகும் ;

அரிதாளின் கீழாக ஐங்கலத்தேன் கூடுகட்டும் ;
மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல்என்று
ஆனைகட்டிப் போரடிக்கும் அழகான தென்மதுரை''

என்பன மதுரைமாநகரத்தைச் சிறப்பிக்கும் அடிகள். நமது நாட்டிலும், பிற நாடுகளிலும் காணப்படும்



பழையனவும் புதியனவுமாகிய பட்டணங்கள் எல்லாம் நதிக்கரைகளில் அமைந்திருப்பதை நாம் அறிகிறோம்.

நமது நாட்டில் **காசி, கல்கத்தா, காஞ்சி, தஞ்சை, திருச்சி, திருநெல்வேலி** முதலிய பட்டணங்களே-யும், பிற நாடுகளில் **இலண்டன், பாரிஸ், ரோம்** முதலிய பட்டணங்களேயும் எடுத்துக்காட்டுக்களாகக் கூறலாம். எனவே, நம்நாட்டுப் பண்டைய பட்டணங்-களுள் ஒன்ருய் விளங்கும் மதுரை மாநகரம், **வைகை**-யாற்றின் தென்கரையில் அமைந்திருக்கிறது. இந்-நகரத்தைப் பற்றிய வரலாறுகளும் புராணக் கதை-களும் இதன் தொன்மையை வலியுறுத்துகின்றன.

2. நமது நாட்டில் பண்டைக் காலத்தில் புகழ் மிக்கு விளங்கிய **பாடலிபுத்திரம், அயோத்தி, விதேகம்** முதலிய நகரங்கள் இருந்த இடம் தெரி-யாமல் அழிவுற்றன. ஆனல், மதுரை மட்டும், தன் பண்டைப் பெருமை திணேத்துணேயும் குறையாமல், இன்றளவும் நிலேபெற்றுக் காட்சியளிப்பதொன்றுமே இதன் அமைப்பின் பெருமைக்குப் போதிய சான்-ருகும். இதன் பழமையை வற்புறுத்தும் சில சான்று-களேக் கவனிப்போம் :

3. கிறிஸ்து பிறப்பதற்கு முன்னமே வடவிந்தி-யாவில் ஆண்ட மன்னர் பலர் மதுரையைப்பற்றி அறிந்திருந்தனர் என்பது பாரதக் கதையால் அறியப்-படுகின்றது. அங்ஙனமே, **வான்மீகி ராமாயணத்**-தில் குறிக்கப்படுகின்ற **அகத்தியர்** காலத்திலும் மதுரை சிறப்புற்று விளங்கியதென்பதை அறிகிருேம். அன்றியும், ஏறத்தாழ ஆயிரத்தெண்ணூறு ஆண்டு-களுக்கு முற்பட்ட சங்கநூல்களும் மதுரையைப் புகழ்கின்றன. மேலும், கிறிஸ்து பிறப்பதற்கு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் வடவிந்தியாவில் அரசாண்ட **சந்திரகுப்த மௌரியர்** அவையில் இருந்த **மெகஸ்தனிஸ்** என்பார், **ஹிராக்கிளிஸ்**

என்பவரின் புதல்வியான **பாண்டேயா** என்பவள் தென்னாட்டில் ஆட்சி புரிந்தாள் என்றும், அவள் இராச்சியம் தென்சமுத்திரம் வரையிற் பரவி இருந்த-தென்றும் தாம் எழுதிய நூலிற்குறித்துள்ளார். அன்றியும், மதுரைக்குப் பதினைந்து மைல் தொலையில் உள்ள **அழகர் மலை**யில் உள்ள குகைகளில் உள்ள-வையும், கி. மு. 300 ஆண்டுகட்கு முற்பட்டவை-யென நிருணயிக்கப்பட்டுள்ளவையுமான கல் வெட்-டுக்கள் இந்நகரத்தைப்பற்றிக் குறிக்கின்றன. எனவே, மேற்கூறிய சான்றுகளால் தென்னிந்தியாவில் உள்ள மிகப் பழைய நகரம் மதுரையே என்பது துணிய-லாகும்.

4. வைகை நதிக்குத் தென்பால் அமைந்துள்ள மதுரை நகரம், முற்காலத்தில் ஒன்பது மைல் நீளமும் ஒன்பது மைல் அகலமும் பரவியிருந்தது. அதன் இடையில் மீனாட்சி கோவில் இடம் பெற்றது. நகரத்தைச் சுற்றி உயர்ந்த மதில்களும், அவற்றின் புறத்தே ஆழ்ந்தகன்ற அகழிகளும் அமைந்து, அரண் செய்தன. நகரத்துக்குத் தெற்கிலும் வடக்கிலும் இரண்டு வாயில்கள் இருந்தன. நகரத்தினுள் செல்-பவர், தெற்கு வாயில் மூலமாகவும், வெளியே செல்பவர் வடக்கு வாயில் மூலமாகவும் செல்ல வேண்டும். கோவிலைச் சுற்றி நான்கு புறங்களிலும் அகன்ற அழகிய வீதிகள் உண்டு. அவற்றைப் பல மாடிகள் உடைய மாளிகைகள் அலங்கரித்தன.

5. இவ்வாறு அமைந்திருந்த நகரத்தின் இடை-யில் ஒரு புறம் பாண்டியனது அரண்மனை இருந்தது. அவ்வரண்மனையைச் சூழ்ந்து உயர்ந்த மதில்கள் கட்டப்பட்டிருந்தன. அரண்மனையை அடைய ஒரு வாயில் மட்டும் இருந்தது. அரண்மனையின் நான்கு

பக்கங்களிலும் அமைச்சர்களும், பிரதானிகளும் வாழ்ந்து வந்தார்கள். நகரத்தின் தெருக்கள் எல்லா-வற்றிலும் சுகாதார முறைப்படி கழிவு நீர் செல்வ-தற்குச் சாக்கடைகள் கட்டப்பட்டிருந்தன. அச்-சாக்கடைகள் மூடப்பெற்றிருந்தன. நகரத்தின் கழிவு நீர் அச்சாக்கடைகளின் மூலம் சென்று, அகழியை அடைவதற்குரிய அமைப்புக் காணப்பட்டது. இத்-தகைய சிறப்புக்களுடன் பண்டைக் காலத்தில் விளங்கிய மதுரை மாநகரம், ஒரு சில வேறுபாடுக-ளுடன் இன்றும் அதே நிலையிலேதான் இருக்கின்றது. இனி, இதன்கண் இடம் பெற்று இந்நகரத்துக்கு மாட்சியளிக்கும் **மீனுட்சி கோவிலைப்** பற்றிச் சிறிது அறியலாம் :

6. அங்கயற்கண் அம்மையின் ஆலயம் மதுரை-யின் மத்தியில் 847 அடி நீளமும், 792 அடி அகலமும் உடையதாய் அமைந்திருக்கிறது. இக்கோவிலின் மதில்களின் புறத்தே மதில்களையொட்டி மரங்களும் செடிகளும் வளர்க்கப்பட்டுள்ளன. இக்கோவிலில் உயர்ந்த கோபுரங்கள் ஒன்பது உண்டு. அவற்றுள் கோவிலின் நான்கு புறங்களிலும் உள்ள வெளிக் கோபுரங்களே மிக உன்னதமானவை. அந்தக் கோபுரங்களைக்காட்டிலும் பெரிய கோபுரங்கள் இந்தி-யாவில் எந்தக் கோவிலிலும் இல்லை. அக்கோபுரங்கள் பார்ப்பதற்கு ஒரே மாதிரி இருந்தாலும், அருகிற்-சென்று ஊன்றிக் கவனிப்பவர்க்கு அவற்றிற்காணப்-படும் மகத்தான வேற்றுமை நன்கு புலப்படும்.

7. அக்கோபுரங்களுள் கிழக்குக் கோபுரத்துக்கு **இந்திரவிமானம்** என்பது பெயர். அதுவே எல்லாக் கோபுரங்களிலும் முந்தியது. அது **சுந்தரேசுவரரின்** கருவறைக்கு எதிரே இருக்கிறது. அதில், ' **திரிபுவன**

**சக்கரவர்த்தி கோனேறி நன்மை கொண்டான் சுந்தரபாண்டியனுல் கட்டப்பட்டது**' என்னும் கல் வெட்டுக் காணப்படுகின்றது. ஆயினும், அக்-கோபுரத்தின் மூலம் மக்கள் பெரிதும் நடமாடுவதில்லை. கோபுரத்தின் உச்சியினின்றும் கீழே விழுந்து இறந்த ஒருவன் ஆவி அங்குச் சுற்றித் திரிவதே அதற்குக் காரணமெனக் கூறப்படுகிறது. முற்காலத்தில் மது-ரையைக் கள்ளர்களின் தொல்லையினின்று விடுவிக்கக் காசியினின்றும் மதுரைக்கு வந்த அரசகுமாரனை **மதுரை வீர**னுக்கு அக்கோபுரத்தின் அடிவாரத்திலே-தான் கோயில் கட்டப்பட்டுள்ளது. அவ்வீரன், தான் தீக்குளிக்கும் போது அங்கயற்கண்ணியம்மையிடம் வரம் பெற்றதற்கேற்ப, இக்காலத்திலும் முதலில் அவ்-வீரனுக்குப் பூசை நடந்த பிறகே கோவிலிற் பூசை தொடங்குகிறது.

8. மேற்குக் கோபுரத்துக்கு **வருண விமானம்** என்பது பெயர். அக்கோபுரம் 150 அடி உயரம் உள்ளது; ஒன்பது நிலைகளை உடையது. அதிற் செதுக்கப்பட்டுள்ள உருவங்களை நேரிற்கண்டு-களிக்க முடியுமேயன்றி, வருணித்துக் கூறமுடியாது. தெற்குக் கோபுரம் 152 அடி உயரம் உடையது. இதுவே நான்கு கோபுரங்களுள் உயர்ந்தது. இதற்கு நேர் வடக்கில் உள்ளது **மொட்டைக் கோபுரம்** எனப்படும். அதுவே வடக்குக் கோபுரமாகும். அது முற்றுப்பெருமல் இருந்தமையால், அப்பெயர் பெற்-றது. ஆனுல், இப்போது அது முற்றுப்பெற்று-விட்டது.

9. வடக்குக் கோபுரத்தினுள் நுழைந்து கோவிலை அடைந்தால், நாம் காண்பன ஐந்து **சங்கீ-தத்தூண்கள்**. அவற்றுள் ஒவ்வொன்றும் ஒரே

கல்லிற்செதுக்கப்பட்ட இருபத்திரண்டு தூண்களைக் கொண்டது. அத்தூண்களைத் தட்டினால் ஓர் இனிய தொனி உண்டாகிறது. ஆதலால், அத்தூண்கள் அப்பெயர் பெற்றன. அங்கிருந்து கிழக்கே திரும்பினால், **பதினாறுகால் மண்டப**மும், அதை அடுத்து **ஆயிரக்கால் மண்டப**மும் இருப்பதைக் காணலாம். கிழக்குக் கோபுரத்தினுள் புகுந்து வலப்புறம் திரும்பினாலும் அவற்றை அடையலாம். திரும்பாமல் நேரே சென்றால், சுந்தரேசுவரர் கருவறையை அடையலாம்.

10. சுந்தரேசுவரர் கருவறைக்கு எதிரில் இருக்கும் கீழ்க்கோபுரம் பிரதான கோபுரமாயிருந்தும், அதன் மூலம் மக்கள் நடமாடுவதில்லை என்று கூறினோம். எனவே, மக்கள் அக்கோபுரத்தின் தென்புறத்தில் அங்கயற்கண்ணி அம்மையின் கருவறைக்கு நேரில் உள்ள ஒரு வாயிலையே அதிகமாக உபயோகிக்கிறார்கள். அவ்வாயிலுள் நுழைந்தவுடனே **அஷ்ட சத்தி மண்டபம்** இருக்கிறது. அங்கு **மகேசுவரி, பிராமி, நாராயணி, ஐந்திரி, கௌமாரி, வராஹி, நாரசிம்மி, அபராஜிதா** எனப்படும் எட்டுச் சத்திகளின் உருவங்கள் செதுக்கப்பெற்றுள்ளன. அஷ்டசத்தி மண்டபத்தைக் கடந்து உட்சென்றால், **மீனாட்சி நாயக்கன் மண்டபம்** காணப்படுகின்றது. அந்த இரண்டு மண்டபங்களுக்கும் இடையில் இடம் பெற்றுள்ள **வேடன் வேடிச்சி**யின் சிற்பங்கள் ஒப்புயர்வற்றவை என்று கருதப்படுகின்றன.

11. மீனாட்சி நாயக்கன் மண்டபத்தைக் கடந்து சென்றால், நாம் **முதலி மண்டபத்தை** அடையலாம். முதலி மண்டபத்துக்கு **இருள் மண்டபம்** என்னும் பெயரும் வழங்குகிறது. அவ்விரு மண்டபங்களுக்கும்

இடையில் நூற்றுக்கணக்கான அகல் விளக்குகள் பொருத்தப்பட்ட வட்டவடிவமான பித்தளைப் பிரபை ஒன்று இருக்கிறது. இரவில் அவ்விளக்குக்கள் ஏற்றப்படுவது இனிய காட்சியளிக்கின்றது. முதலி மண்டபத்தில் ஆறு சிற்பங்கள் உள்ளன. அவற்றுள் **மோகினி, பிட்சாடனர், அனசூயா** என்னும் மூன்றும் காண்பவர்கள் கண்ணைக் கவரத்தக்க வனப்புள்ளவை.

12. முதலி மண்டபத்தைக் கடந்து சென்றால், அங்கயற்கண் அம்மையின் கருவறையை அடையலாம். செல்லும் வழியில் இடப்பக்கத்தில் **பொற்றாமரைக் குளம்** இருக்கிறது. அக்குளத்தின் வடபக்கம் உள்ள சுவரிலும், கிழக்குப் பக்கம் உள்ள சுவரிலும் மதுரையில் திருக்கோவில் கொண்டுள்ள **சொக்கலிங்கப் பெருமான்** புரிந்த அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் விளக்குகின்ற வண்ண ஓவியங்கள் உள்ளன. முதலி மண்டபத்தைக் கடந்து சென்றால், **கிளிக்கூட்டு மண்டபம்** இருக்கிறது. அங்குப் பல கிளிக்கூடுகள் இருப்பதால், அதற்கு அப்பெயர் வழங்குகிறது. அம்மண்டபத்தில் உள்ள **பஞ்சபாண்டவர் சிலை**களும், **வாலி சுக்கிரீவர்** சிலைகளும் கண்டு களிக்கத்தக்கவை.

13. கிளிக்கூட்டு மண்டபத்தைக் கடந்து சென்றால், மீனாட்சி அம்மையின் கருவறையை அடைகின்றோம். அதன் வெளியில் உள்ள ஒரு மண்டபத்தில் ஒரு கற்றூணில் திருமலை நாயக்கர் உருவமும் அவர் மனைவியர் இருவர் உருவமும் செதுக்கப்பெற்றுள்ளன. இவ்வளவு பெரிய கோவிலுக்கு அதனுள் அமைந்துள்ள மீனாட்சியின் சிலை மிகச் சிறியதென்றே கூறலாம். ஆயினும், அம்மையின் முகம் அழகு

சொட்டும்படி அமைந்திருப்பது நேரிற்கண்டு களிக்கத் தக்கதாம்.

14. மீனாட்சியம்மையின் கருவறைக்கு வடபால் உள்ள ஒரு வாயிலிற்புகுந்தால், சோமசுந்தரக் கடவுளின் கருவறையின் சுற்றுவழியை அடையலாம். அங்கு முதலில் நமக்குக் காட்சி அளிப்பவர் **முக்குறுணிப் பிள்ளையார்**. விநாயக சதுர்த்தியன்று பதினெட்டுப் படி அரிசி மாவால் செய்யப்பட்ட ஒரே கொழுக்கட்டை அவருக்கு நிவேதிக்கப்படுகின்றது. அக்கொழுக்கட்டையை எப்படிச் செய்கிறார்கள் என்பது வியப்புறத்தக்கது.

15. முக்குறுணிப் பிள்ளையாரைப் பார்த்துக்கொண்டு முதலில் மேற்காகவும் பிறகு வடக்காகவும் திரும்பிச் சுந்தரேசர் கோவிலின் சுற்று வழியில் வரும் போது வடமேற்கு மூலையில் **தமிழ்ச்சங்க மண்டபம்** இருக்கின்றது. அதைப் பார்த்துக்கொண்டே வந்தால், சுந்தரேசர் கருவறைமுன் உள்ள **கம்பத்தடி மண்டபத்தை** அடைகிறோம். அங்குச் சிவபெருமானின் இடபக்கொடி ஏற்றப்படும் கொடிக் கம்பம் இருப்பதால், அம்மண்டபத்திற்கு அப்பெயர் வழங்குகின்றது. அம்மண்டபத்தில் உள்ள சிற்பங்கள் பல. அவை யாவும் உன்னத வேலைப்பாடு உடையவை. அவற்றுள் காளியின் உருவமும், சிவபெருமான் காளியோடு ஆடிய ஊர்த்துவதாண்டவ உருவமும், மீனாட்சி கலியாணத்தைக் குறிக்கும் உருவமும், கால் மாறியாடிய நடராச மூர்த்தியின் உருவமும், மற்றும் பல உருவங்களும் நேரிற்கண்டு களிக்கத் தக்கனவேயன்றி, அவற்றின் அழகை ஏட்டில் எழுதி வருணித்தல் இயலாத செயலாகும்.

## பயிற்சி :

1. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

விண் மறைக்கும், வினை மறைக்கும், கவிஞர், நடுநாயகமாக, தென்னன், வான்கமுகு, வடக்கினும், அரிதாள், தொன்மை, திணைத்துணையும், இன்றளவும், சான்ருகும், ஆழ்ந்தகன்ற, வாயில்கள், உன்னதமானவை, மகத்தான, ஊன்றிக் கவனிப்பவர்க்கு, தொல்லை, தீக்குளிக்கும் போது, முற்றுப்பெருமல், பிரதானம், வனப்புள்ளவை, இடபக் கொடி, இயலாத செயல்.

2. வாக்கியங்களில் அமைக்க :—

நடு நாயகமாக, திணைத்துணையும், இன்றளவும், சான்றுகளால், தெற்கிலும் வடக்கிலும், ஏறத்தாழ, பெற்றதற்கேற்ப, கண்டு களிக்க, முற்றுப்பெருமல், நுழைந்தவுடனே, செல்லும் வழியில், அழகு சொட்டும்படி.

3. விடை எழுதுக :—

(அ) மதுரை மாநகரின் சிறப்பியல்புகள் யாவை?
(ஆ) மதுரை மாநகரின் பழமையை வற்புறுத்தும் சில சான்றுகள் எவை?
(இ) மதுரை மாநகரின் பண்டைய அமைப்பு முறை யாது?
(ஈ) அங்கயற்கண் அம்மையின் ஆலயத்தின் சிறப்பு யாது?
(உ) மேற்குக் கோபுரமும் வடக்குக் கோபுரமும் எவ்வெப்பெயர்களால் வழங்கப்படுகின்றன?
(ஊ) இந்திர விமானத்திலுள்ள கல் வெட்டு என்ன கூறுகிறது?
(எ) வடக்குக் கோபுரத்தினுள் இருக்கும் தூண்களுக்குச் 'சங்கீதத் தூண்கள்' என்னும் பெயர் வழங்கக் காரணம் யாது?

4. கீழ் வரும் சொற்களில் உள்ள இடைநிலைகளை எடுத்து எழுதுக :—

விளங்குகிறது, வலியுறுத்துகின்றன, அழிந்தன, இருந்தனர், செல்பவர், வருவர்.

## இலக்கணம் :

### மரபு, வழுவமைதி :

1. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) யானை ஒட்டி, ஆட்டுப் பாகன், புலிக்கன்று, தென்னஞ் செடி.

(2) யானைப்பாகன், ஆட்டு இடையன், புலிக்குட்டி, தென்னம்பிள்ளை.

முதல் வரிசையில் உள்ள சொற்களைக் கவனிக்க. அவை உலக வழக்கத்துக்கு ஒத்தவையாய் இல்லை. எனவே, உலகில் எந்தப் பொருளை எந்தச் சொல்லால் குறிப்பது வழக்கமோ, அந்தப் பொருளை அச்சொல்லாலேயே குறிக்கவேண்டும். இதற்கு இலக்கணத்தில் 'மரபு' என்னும் பெயர் வழங்குகிறது.

2. கீழ் வருவனவற்றுள் மரபல்லாதனவற்றைத் திருத்துக :—

குதிரைக்குட்டி, எருமைக்குட்டி, கீரிக்குட்டி, மாம்பிள்ளை, ஆட்டுச்சாணி, மாட்டுப் புழுக்கை, பசுக்கன்று, கிளிக்குஞ்சு.

3. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) கண்ணன் தன் பசுவை, "இங்கே வா அம்மா," என்று கூப்பிட்டான்.

(2) தன்னிடம் கோபமாகப் பேசிய நாகனைப் பார்த்து, 'இந்த நாய் ஏன் இப்படிக் குரைக்கிறது?' என்றான் திண்ணன்.

முதல் வாக்கியத்தில் அஃறிணையாகிய பசு 'அம்மா' என்று உயர்திணையாக விளிக்கப்பட்டது. (அன்பு)

இரண்டாம் வாக்கியத்தில் உயர்திணையான நாகன் அஃறிணையாக வழங்கப்பட்டான். (கோபம்)

இவ்வாறு மகிழ்ச்சி, கோபம், அன்பு, சிறப்பு, இழிவு, உயர்வு என்னும் காரணத்தால், உயர்திணையை அஃறிணையாக-வும், அஃறிணையை உயர்திணையாகவும் குறிப்பது 'திணை வழு-வமைதி' எனப்படும்.

4. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) தாய் தன் மகளைப் பார்த்து, 'கண்ணே, வாடா,' என்றாள்.

(2) தேவன் மூவுலகத்துக்கும் தாய்.

முதல் வாக்கியத்தில் பெண் குழந்தை 'வாடா' என்று ஆண் பாலாக ஏவப்பட்டுள்ளது. (மகிழ்ச்சி)

இரண்டாம் வாக்கியத்தில் 'தேவன்' என்னும் ஆண் பால் பெண் பாலாக வழங்கப்பட்டுள்ளது. (சிறப்பு)

மேலே குறித்தபடி மகிழ்ச்சி, சிறப்பு, கோபம் முதலிய காரணத்தால் ஆண்பாலைப் பெண்பாலாகவும், பெண்பாலை ஆண் பாலாகவும் குறிப்பது 'பால் வழுவமைதி' எனப்படும்.

5. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) மலை நிற்கின்றது.

(2) தெய்வம் இருக்கின்றது.

இவற்றில் மலை நிற்பதும், தெய்வம் இருப்பதும் முக்காலத்திலும் இடைவிடாமல் நிகழும் தொழில். எனவே, இவற்றை நிகழ்காலத்திற் சொல்லத் தகும்.

6. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

கண்ணன் சாப்பிடுகிறான். அவனை விரைவாக அழைத்துப் போக விரும்பும் குகன், 'கண்ணா, சாப்பிட்டு ஆயிற்றா?' என்று கேட்கிறான். அதற்குச் சாப்பிட்டு முடிக்காத கண்ணன், 'ஆயிற்று!' என்று கூறுகிறான். இங்கு விரைவு பற்றி நிகழ் காலம் இறந்த காலமாகக் குறிக்கப்பட்டது.

7. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

அடே, நீ மரத்தில் ஏறினால் உன் மண்டை உடைந்தது.

இங்கு எதிர்காலத்தில் நடைபெற வேண்டிய செயலின் பயன் இறந்த காலத்தால் குறிக்கப்பட்டது.

இங்ஙனம் விரைவு, தெளிவு முதலிய காரணங்களால், ஒரு காலம் வேறொரு காலமாகக் குறிக்கப்படுவது 'காலவழுவமைதி' எனப்படும்.

# 4. கொடை வள்ளல் பாரி

1. பண்டைக்காலத்தில் தமிழ் நாட்டில் கொடையாளர் பலர் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் **பாரி, காரி, ஆய், பேகன், அதிகமான், ஓரி, நள்ளி** என்ற தமிழ் மன்னர் ஏழுவரையும் **கடையெழுவள்ளல்கள்** என்று கூறுவர். இவ்வெழுவருள்ளும் பாரியே மிகவும் பெருமை வாய்ந்தவனுவன்.

2. பாரி மன்னன் முந்நூறு ஊர்களைக்கொண்ட **பறம்பு நாட்டை** ஆண்டு வந்தான். பறம்பு நாடு மலைகள் நிறைந்தது. அம்மலைச் சாரல்களில் எக்காலமும் மழை பெய்து புது வெள்ளம் பெருக்கெடுப்பதால், **நெல், கரும்பு, தென்னை, வாழை** முதலியன செழித்து வளரும். அன்றியும், பறம்பு நாட்டு மலைகளில் பலா மரங்களிற்பழுத்திருக்கும் பழங்கள், பறிப்பாரற்றுக் கனிந்து வெடித்துத் தேனைச் சிந்தும். கிழங்கும், கனியும், தளிரும், மலரும் எங்கும் மிகுந்து, பறம்பு வளம் மிக்க நாடாய் விளங்கி வந்தது. எனவே, பாரியின் நாட்டில் உணவுப் பஞ்சம் எஞ்ஞான்றும் தலை காட்டியதேயில்லை.

3. இங்ஙனம் வளம் பொருந்திய நாட்டுக்கு அரசனுய் விளங்கிய பாரி, தாய்மொழியாகிய தமிழின் மீது அளவற்ற அன்பு கொண்டிருந்தான்; தமிழ்ப் புலவர்களுக்கும் பாணர்களுக்கும் அளவிறந்த பொருள்களைப் பரிசிலாகக் கொடுத்து, அல்லும் பகலும் அறிஞர்களுடன் அளவளாவி இருத்தலையே இன்பமாகக் கருதினுன். அம்மன்னனது வள்ளற்றன்மையைக் கேள்வியுற்ற புலவர் பலரும், அவனைக் கண்டு பாக்கள் இயற்றிப் பரிசில்கள் பெற்றனர். அவன் காலத்தில் பெரும்புலவர்களாய் விளங்கிய ஔவை-

**யார், கபிலர், நாகனுர்** முதலிய பலரும் அவனுக்கு நெருங்கிய நண்பராயினர். பாரி தன்னைப் பாடிய புலவர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஊராகத் தன்னிடமிருந்த முந்நூறு ஊர்களையும் பரிசிலாகக் கொடுத்துவிட்டான்.

4. இங்ஙனம் பெருவள்ளலாய் விளங்கிய பாரியின் புகழ் தமிழகமெங்கும் பரவியது. சேர சோழ பாண்டியராகிய மூவேந்தரும் அவனது புகழைக் கேட்டுப் பொருமை கொண்டனர்; அவனை அழிக்கவும் கருதினர்; முதலிற் போர் தொடங்குவதற்கு ஒரு காரணமாகப் பாரியின் மகளிரை மணம் பேசினர். தகுதியில்லாத முறையில் பெண் கேட்ட மூவேந்தர்க்குப் பாரி பெண் தர மறுத்துவிட்டான். இதையே காரணமாகக் கொண்டு மூவேந்தரும் ஒன்று கூடிப் பெரும்படையுடன் பறம்பு நாட்டை முற்றுகை இட்டனர்.

5. பாரி எப்படிக் கொடையில் சிறந்தவனே, அப்படியே படையிலும் சிறந்தவனுய் விளங்கினுன். அவன் வீரர்கள், அஞ்சாமையும் அறிவும் படைத்தவர்கள்; போரில் வெற்றியே அன்றித் தோல்வியை அறியாதவர்கள். அன்றியும், பாரியின் கோட்டையும் பகைவர் உட்புக முடியாதபடி காட்டரணும் மலையரணும் பெற்றது. எனவே, மூவேந்தர் பெரும்படையுடன் பறம்பு மலையை முற்றித் தாக்கியபோது, பாரியும் தன் சிறு படையுடன் மூவேந்தரை எதிர்த்தான்; கடும்போர் நடந்தது; வீரர் பலர் மாண்டனர். இறுதியில் பாரி தன் கோட்டைக்குள் நுழைந்து தாழிட்டுக்கொண்டான். மூவேந்தரின் படைகள் கோட்டையின் உள்ளே புகுவதற்குச் செய்த முயற்சிகள் பயனற்றவை ஆயின. கோட்டைக்குள் நுழைய

முடியாது போகவே, கோட்டைக்குள்ளிருந்து யாரும் வெளியில் வாராமலும், உணவுப் பொருள் முதலிய-வைகளை எவரும் உள்ளே கொண்டு செல்லாமலும் தடுத்துப் பறம்பு மலையை முற்றுகை செய்தனர்.

6. பறம்பு மலையைப் பகைவர்கள் முற்றுகை-யிட்டிருக்கும் செய்தி பாரியின் உயிர் நண்பராகிய கபிலருக்குத் தெரிந்தது. உடனே அவர் ஓடோடியும் வந்தார்; மூவேந்தர்களைக் கண்டார்; "பறம்பு மலையை முற்றுகையிட்டிருக்கும் மூவேந்தர்களே, நீங்-கள் நிலங்கண்ட அளவு காலாட்படைகளை நிறுத்தி-னாலும், மரங்களெங்கணும் கட்டப்பட்ட யானைப்-படையை உடையவரானாலும், பறம்பு மலையை உங்களால் கொள்ள முடியாது. பாரியின் மலையில் உழவர்களின் முயற்சி இன்றியே மூங்கில் நெல்லும், வள்ளிக் கிழங்கும், கனி வகைகளும் மிகுதியாகக் கிடைக்கின்றன. ஆகையால், பறம்பு மலை வெல்லு-தற்கரியது. நீங்கள் பறம்பு நாட்டை அடைய விரும்பினால், உங்களுக்கு ஒரு யோசனை கூறு-கிறேன்: நீங்கள் பாணர்களாகவும், உங்கள் மனைவியர்கள் பாடினிகளாகவும் வேடம் பூண்டு பாரி-யின் முன்னே சென்று அவன் புகழைப் பாடி ஆடுவீர்களாயின், நீங்கள் பாரியின் பறம்பையும், பாரியையும், என்னையுங்கூடப் பரிசலாகப் பெற-லாம்!" என்று ஒரு செய்யுள் கூறினார். அது கேட்ட மூவேந்தரும் வெட்கித் தலை குனிந்தனர்.

7. இறுதியில் மூவேந்தர்களுக்கு ஒரு யோசனை தோன்றியது. பாரி எப்போதும் புலவர்களை வர-வேற்று உபசரிக்கும் வழக்கமுடையவன்; புலவர்-களையும் பாணர்களையும் பாரியின் காவலர்கள் எப்போதும் தடை செய்வதில்லை. ஆகையால், வீரர்

சிலரைப் புலவர்களைப் போலவும் பாணர்களைப் போலவும் மாறுவேடம் கொள்ளுமாறு செய்து, கோட்டைக்குள் அனுப்பினர். அவ்வஞ்சகரைப் பாரியின் காவலர் அரியாது உள்ளே விட்டுவிட்டனர். அங்ஙனம் உள் நுழைந்த வஞ்சகர், திடீரெனக் கோட்டை வாயிற் காவலர்களைத் தாக்கினர். எதிர் பாராத இத்தாக்குதலுக்கு ஆற்றாத காவற்படை பின் வாங்கிற்று. கோட்டை வாயில் திறக்கப்பட்டது. மூவேந்தரின் படைகளும் கோட்டையுள் நுழைந்துவிட்டன. பாரி தன் படைகளை நடத்திக் கடும்போர் புரிந்து உயிர் துறந்தான். மூவேந்தர் பறம்பு நாட்டைத் தமக்குச் சொந்தமாக்கிக்கொண்டனர். இதற்கிடையில் பாரியின் நண்பராகிய கபிலர், பாரி மகளிரை அழைத்துக்கொண்டு பகைவர் காணாதபடி வெளியேறிவிட்டார். கொடை வள்ளலாய் விளங்கிய பாரியை மூவேந்தரும் வஞ்சனையாற்கொன்றதை எல்லாரும் இகழ்ந்தனர். இதனால், பாரியின் புகழ் மேலும் வளர்வதாயிற்று.

### பயிற்சி :

1. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—

கனிந்து, துளித்து, எஞ்ஞான்றும், அளவிறந்த, அளவளாவி, முற்றுகையிட்டனர், காட்டரண், மலை அரண், வெல்லுதற்கரிது, பாணர்கள், பாடினிகள், பூண்டு, வஞ்சகர், ஆற்றாத.

2. வாக்கியங்களில் அமைக்க :—

ஓடோடியும், வரவேற்று, கொள்ளுமாறு, திடீரென, எதிர்பாராத, அளவிறந்த, அல்லும் பகலும், அளவளாவி.

3. விடை எழுதுக :—

(அ) கடையெழு வள்ளல்கள் யாவர் ?

(ஆ) பறம்பு நாட்டின் தன்மை யாது ?

(இ) பாரியின் காலத்துப் பெரும்புலவர்கள் யாவர் ?
(ஈ) பறம்பு நாட்டின்மீது மூவேந்தரும் ஏன் போர் தொடுத்தனர் ?
(உ) மூவேந்தர்களுக்குக் கபிலர் யாது கூறினர் ?
(ஊ) முற்றுகையின் முடிவு என்ன ?

4. உதாரணங்கள் தருக :—
காலவழுவமைதி, இடவழுவமைதி, திணை வழுவமைதி.

## இலக்கணம் :

### பெயர்ச்சொல்லில் அறிய வேண்டுபவை :

### திணை :

கீழ் வருவனவற்றைப் படிக்க :—

1. முருகப்பெருமான் வள்ளியை மணந்தான்.
2. பங்கஜம் கண்ணனோடு விளையாடினாள்.
3. பசு தவிடு தின்னும்.
4. யானை கல்லை உருட்டியது.

முதல் வாக்கியத்தில் உள்ள முருகப்பெருமான், வள்ளி என்பன தேவரைக் குறிக்கும் பெயர்ச்சொற்கள். இரண்டாம் வாக்கியத்தில் உள்ள பங்கஜம், கண்ணன் என்பன மக்களைக் குறிக்கும் பெயர்ச்சொற்கள்.

தேவரும் மக்களும் உயர்குலத்தைச் சேர்ந்தவர்கள். ஆதலால், தேவரும் மக்களும் உயர்திணைப் பொருள்கள். (திணை என்பதற்குக் குலம், ஜாதி என்பன பொருள்.)

மூன்றும் வாக்கியத்திலும், நான்காம் வாக்கியத்திலும் உள்ள பசு, யானை என்பவை, உயிர் உள்ள பொருள்கள் ; ஆனல், உயர்குலத்தவை அல்ல. தவிடு, கல் என்பன உயிர் இல்லாப் பொருள்கள் ; ஆதலால், உயர்குலத்தவை அல்ல.

மக்கள், தேவர், நரகர் தவிர, மற்ற உயிர் உள்ளவையும், இல்லாதவையும் ஆகிய பொருள் அஃறிணைப் பொருள்களாம். (அஃறிணை = அல் + திணை—உயர்வு அல்லாத குலம்)

## பால் :

2. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

1. இராமன் மிதிலை சென்றான். —ஆண் பால்
2. சீதை அவனைக் கண்டாள். —பெண் பால்
3. இது சிறுவர் பள்ளி. —பலர் பால்
4. அது சிறுமியர் பள்ளி. —பலர் பால்
5. மணம் காண மக்கள் வந்தார்கள். —பலர் பால்

மேலே உள்ள உயர்திணைப் பொருள்களுள் 'இராமன்' என்பது ஓர் ஆணைக் குறிக்கும் சொல். அஃது ஆண் பால் எனப்படும்; 'சீதை' என்பது ஒரு பெண்ணைக் குறிக்கும் சொல். அது பெண் பால் எனப்படும். 'சிறுவர், சிறுமியர், மக்கள்' என்பன, முறையே ஆடவருட்பலரையும், பெண்டிருட்பலரையும், அவ்விருவருட்பலரையும் குறிக்கும் சொற்கள். ஆதலின், பலர் பால் எனப்படும். இவை உயர்திணைக்கு உரியவை. (பால்=பகுப்பு)

3. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

1. ஆடு செடியை மேய்ந்தது. —ஒன்றன் பால்
2. ஆடுகள் செடிகளை மேய்ந்தன. —பலவின் பால்
3. பாறை உடைந்தது. —ஒன்றன் பால்
4. பாறைகள் உடைந்தன. —பலவின் பால்

அஃறிணைப் பொருள்களில் எருது, சேவல் முதலிய ஆண் பாலைக் குறிக்கும் சொற்களும், பசு, பெட்டை முதலிய பெண் பாலைக் குறிக்கும் சொற்களும் உண்டு. ஆயினும், அஃறிணைப் பொருள்களுள் உயிர் உள்ளவை பலவற்றில் இப்-பகுப்புக்கள் விளக்கமாகத் தெரிவதில்லை. ஆதலால், அஃறிணைப் பொருள்கள் அனைத்திற்கும் ஆண் பால், பெண் பால் என்னும் பகுப்புக் கூறப்படாமல், ஒன்று, பல என்னும் எண்களால் பால் கூறப்படுவதே வழக்கம். ஒன்றன் பாலும் பலவின் பாலும் அஃறிணைக்குரியவை.

## 5. சதுரதந்தனும் விசயனும்

1. மரங்கள் செறிந்த ஒரு காட்டில் யானைகள் கூட்டங்கூட்டமாய் வசித்து வந்தன. அவை அனைத்திற்கும் தலைமை தாங்கும் பேறு பெற்றது '**சதுரதந்தன்**' என்ற களிறு. சதுரதந்தன் ஆட்சியில் தும்பிகள் துன்பமின்றி வாழ்ந்து வந்தன. ஆனால், ஓர் ஆண்டில் மழை பெய்யாமல் வானம் பொய்த்தது. அப்போது அடவியில் இருந்த தடாகங்கள் எல்லாம் வற்றிவிட்டன; மரங்களெல்லாம் உலர்ந்து கருகிவிட்டன. அது கண்ட சதுரதந்தன், உடனே சில யானைகளைக் கூவி எல்லாப் பக்கங்களிலும் சென்று பார்த்து நீர் உள்ள இடத்தைக் கண்டறிந்து வருமாறு பணித்தது.

2. அங்ஙனம் சென்ற யானைகள், பலதிசைகளிலும் சென்று அலைந்து, இறுதியில் நெடுந்தூரத்தில் **சந்திர சரசு** என்ற நீர்நிலை, தண்ணீர் ததும்பியிருத்தலைக் கண்டு வந்து செப்பின. உடனே யானைகள் எல்லாம் சந்திர சரசை நோக்கிச் சென்றன.

3. பல்லாயிரம் முயல்கள், **சிலீமுகன்** என்ற முயலின் ஆட்சியில் சந்திர சரசைச் சுற்றி வாழ்ந்துகொண்டிருந்தன. சில நாட்கள் தண்ணீரையே காணுமல் துன்புற்ற யானைகள், சந்திர சரசில் இறங்கி ஆனந்த மேலீட்டால் அதைக் கலக்கின. பின்பு அவை இங்குமங்கும் உல்லாசமாய்த் திரிய, அவற்றின் கால்களிற்சிக்கிப் பல முயல்கள் உயிரிழந்தன. அது கண்ட முயலரசு, நடுநடுங்கிச் செய்வது இன்னதென அறியாது, தன் அமைச்சனுகிய **விசயன்** என்ற முயலை அழைத்து, நேரிட்ட விபத்தைக் கூறியது.

4. அது கேட்ட விசயன், முயலரசை நோக்கி, " வேந்தே, இந்த அற்ப யானைகளை வெல்வது எனக்கு அருமையோ! உத்தரவளிப்பீராயின், இவ்யானைகளை எல்லாம் நாளையே இவ்விடத்தினின்று விரட்டி-விடுவேன்!'' என்று பெருமிதத்தோடு கூறியது. அது கேட்ட சிலீமுகன், பெருமகிழ்வெய்தி, உடனே சென்று தும்பிகளைத் துரத்திவிட்டு வருமாறு பணித்-தது. முயலமைச்சாகிய விசயனும் முயலரசினிடம் விடை பெற்றுச் சென்று, யானைகள் சந்திர சரசை நாடி வரும் வழியில் தடாகத்தின் அருகில் ஒரு மேட்-டின் உச்சியில் உட்கார்ந்து, யானைகளின் வரவை எதிர் நோக்கி இருந்தது. அப்போது சதுரதந்தன் என்ற யானை அரசு முன்னும், மற்ற யானைகள் பின்னுமாகத் தடாகத்தை நோக்கி வந்தன. சதுர-தந்தன் தன் அருகில் வந்த போது, அதனை விசயன் கூப்பிட்டு, " ஐயா, யானை அரசே, சுகமாய் இருக்கி-றீரா ?'' என்று வினவியது.

5. அது கேட்ட தந்தியரசு வியப்புற்று விசயனை நோக்கி, "ஐயா, நான் நலமே! நீர் யார் ?'' என்று கேட்டது. அப்போது முயல் அமைச்சு,

" இசைநிலா எறிக்குந் திங்கள்
ஏவிய தூதன் ; என்பேர்
விசையன்என் பார்கள் ; உன்பால்
விடுக்கவந் துற்றேன்.''

என்று மிடுக்காகப் பதில் கூறியது. அதனைச் செவி-யுற்ற களிற்றரசு, மிகப் பயந்து, நின்ற இடத்திலேயே அசைவற்று நின்று, "ஐயா, விசயரே, நீர் திங்கள் நாதன் ஏவிய தூதரா ? நல்லது ! நீர் இங்கு வந்த காரணம் யாதோ ?'' என்று கேட்டது. அப்போது முயல் அமைச்சு,

"சந்திர சரசென்(று) எங்கள் சசிபக வான்பே ராலே
இந்தநற் கான கத்தில் இருஞ்சுனை ஒன்றுண் டாக்கி
அந்தநற் சுனையில் எங்கள் ஐயனும் தேவி மாரும்
முந்திய சலக்கி ரீடை முயங்கியே பகலைக் கெல்லாம்

"தண்ணறுஞ் சுனைக்குக் காவல்
வைத்தெமைத் தாங்கள் போவர் ;
விண்ணவர் உலகத் தாரும்
விரும்பினும் தொடப்ப டாது ;
நண்ணினை சுனைநீர் உண்ண
நாடினை நீயென்(று) எங்கள்
அண்ணலார் சினந்துன் பக்கல்
அனுப்பினர் ' தடுத்தி !' என்று.

"மூவரின் முதல்வ ரான முனைவனுர் முடிமேல் வாழும்
தேவரைப் பகைத்த சிந்தைச் செயலினை இனித்த டுத்தே
மேவுதண் சுனைமேல் வைத்த வேட்கையை விடுத்திந் நேரம்
போவதே கருமம் !"

என்று பல வகையான புத்திமதிகளைக் கூறியது. அன்றியும், "ஐயா, வேழ வேந்தரே, இவை அனைத்தும் யான் உம்பாற் கொண்ட அன்பினுற் கூறினேன். ஆனல், திங்களம்பகவர் உம்மேற் சினந்தது கொஞ்சம் அன்று! ஆயினும், யான் அக்கடவுள்பாற்சென்று அவரது சினத்தை ஆற்றுவிப்பேன். அதற்கு நீர் செய்யவேண்டுவது யாதெனின், உடனே உம்முடைய பரிவாரங்களுடன் இவ்விடத்தை விட்டு அகலுதல் வேண்டும்," என்று கூறித் தந்தியின் மனம் தடுமாறும்படி செய்துவிட்டது.

6. யானையரசு, "ஐயா, விசயரே, நீர் குறித்த சந்திரன் என்னும் தேவு இத்தடத்திற்குளித்தல் எப்பொழுது என்று கூறுவீராயின், நான் அப்போது வந்து அவரை வணங்கி, மன்னிப்புக் கேட்டுக்கொண்டு என்பரிவாரங்களுடன் இவ்விடத்தைவிட்டுப்

போய்விடுவேன்!'' என்று மிகப் பணிவாகக் கூறியது. அது கேட்ட முயல், "நல்லது!'' என்று கூறி, யானையரசை அன்று இரவு வரச்செய்து, சந்திர




சரசிற்காணப்பட்ட வெண்மதியின் சாயையைச் சுட்டிக் காட்டி, "யானையரசே, இதோ, எங்கள் நாதரையும் அவர் மனைவிமார்களையும் பாரும். அவர்களைப் பயபத்தியுடன் வணங்கிச் செல்லும்,'' என்று கூறிற்று.

7. நீரில் காணப்பட்ட சந்திர, நட்சத்திரங்களின் சாயல்களைக் கண்ட யானை, முயலின் பேச்சை நம்பி, அக்குளக்கரையில் மண்டியிட்டு,

"நான்இதை அறியேன்! எங்கள் நாதனே! பொறுக்க!'' என்று வானுறு மதியை வணங்கி, அவ்விடத்தினின்றும் தன் சுற்றத்தோடும் அகன்றது. அதன் பின்னர் முயல்கள் அங்குக் களிப்புடன் வாழ்ந்து வந்தன.

## பயிற்சி :

**1. அகராதி பார்த்துப் பொருள் கூறுக :—**

அடவி, செறிந்த, பேறு பெற்றது, களிறு, வானம் பொய்த்தது, தடாகங்கள், நீர் நிலே, பணித்து, தும்பிகள், இவ்வண்ணம், வினவியது, மிடுக்காக, செவியுற்ற, களிற்றரசு, ஆற்றுவிப்பேன், பரிவாரங்களுடன், வானுறுமதி.

**2. வாக்கியங்களில் அமைக்க :—**

மண்டியிட்டு, பயபத்தியுடன், வியப்புற்று, மனம் தடுமாறும்படி, கூறுவீராயின், பெருமிதத்தோடு, துன்பமின்றி, இங்குமங்கும், ஆனந்தமேலீட்டால்.

**3. விடை எழுதுக :—**

(அ) களிற்றரசின் பெயர் என்ன ?
(ஆ) களிறுகள் ஏன் இங்குமங்கும் ஓடி ஆர்ப்பரித்தன ?
(இ) சிலீமுகன் யார் ?
(ஈ) முயல்கள் ஏன் வருந்தின ?
(உ) முயலரசு தன் அமைச்சினிடம் யாது கூறிற்று ?
(ஊ) எவ்வுபாயத்தைக்கொண்டு முயலமைச்சு யானேகளேத் தடாகத்தினின்று நீக்கிற்று ?

**4. கீழ்வருவனவற்றுக்கு இப்பாடத்திலிருந்து இரண்டிரண்டு உதாரணங்கள் தருக :—**

| ஆண் பால் | பெண் பால் | பலர் பால் | ஒன்றன் பால் | பலவின் பால் |
|---|---|---|---|---|
| | | | | |

## இலக்கணம் :

### பெயர்ச்சொல்லில் அறிய வேண்டுபவை : (தொடர்ச்சி)

### எண் :

1. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

| | | |
|---|---|---|
| (1) அண்ணன் வந்தான். | — ஆண் பால் | ஒருமை |
| (2) தங்கை பாடினாள். | — பெண் பால் | |
| (3) புத்தகம் கிழிந்தது. | — ஒன்றன் பால் | |
| (1) மனிதர் வந்தனர். | — பலர் பால் | பன்மை |
| (2) பூக்கள் மலர்ந்தன. | — பலவின் பால் | |

அண்ணன், தங்கை, புத்தகம் என்பன, தனித்தனி ஒவ்வொரு பொருளையே குறிக்கின்றன.

மனிதர், பூக்கள் என்பன, தனித்தனி பல பொருள்களைக் குறிக்கின்றன.

ஒரு பொருளைக் குறிக்கும் சொல் 'ஒருமை எண்' என்றும், பல பொருள்களைக் குறிப்பது 'பன்மை எண்' என்றும் கூறப்படும். எண் என்பது இலக்கணத்தில் பொருள்களைக் குறிக்கும் எண்ணிக்கையாம்.

குறிப்பு :—ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் மூன்றும் ஒருமை எண்ணுக்கு உரியவை. பலர் பால், பலவின்பால் இரண்டும் பன்மை எண்ணுக்கு உரியவை.



## இடம் :

2. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

| | |
|---|---|
| நான் பேசுகிறேன்.<br>யான் பேசுகிறேன். | தன்மை ஒருமை |
| நாம் பேசுகிறோம்.<br>யாம் பேசுகிறோம்.<br>நாங்கள் பேசுகிறோம்.<br>யாங்கள் பேசுகிறோம். | தன்மைப் பன்மை |
| நீ பேசுகிறாய். | — முன்னிலை ஒருமை |
| நீர் பேசுகிறீர்.<br>நீங்கள் பேசுகிறீர்கள். | முன்னிலைப் பன்மை |

| | | |
|---|---|---|
| பொன்னன் சென்றான். | — ஆண் பால் | உயர்திணை |
| பொன்னி வந்தாள். | — பெண் பால் | |
| மாந்தர் வந்தனர். | — பலர் பால் | |
| அது சென்றது. | — ஒன்றன் பால் | அஃறிணை |
| அவை சென்றன. | — பலவின் பால் | |

தன்மை என்பது, பேசுபவனைக் குறிக்கும் சொல்லின் இடத்தைக் குறிப்பது. முன்னிலை என்பது, முன் நின்று கேட்பவனைக் குறிக்கும் சொல்லின் இடத்தைக் குறிப்பது. படர்க்கை என்பது, தன்மை முன்னிலைப் பொருள்களால் பேசப் படும் எல்லாப் பொருள்களுக்கும் உரிய இடத்தைக் குறிப்பது. எனவே, சொற்கள் வழங்குவதற்குரிய தானமே, இலக்கணத்தில் ‘ இடம் ’ எனப்படும். அது தன்மை, முன்னிலை, படர்க்கை என மூன்று வகையாம்.

குறிப்பு :—1. தன்மை முன்னிலை இடங்களில் ஐம்பால்கள் தோன்றா. ஆனால், ஒருமை, பன்மை என்னும் எண் மட்டும் தோன்றும்.

2. படர்க்கை இடத்தில் இரு திணைகளும் ஐம்பால்களும் தோன்றும்.

# 6. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையும் டாக்டர் சாமிநாத ஐயரும்

1. இதிகாசங்களையும் புராணங்களையும் இயற்றிய **கம்பர், வில்லிபுத்தூர் ஆழ்வார், சேக்கிழார், பரஞ்சோதியார், கச்சியப்பர்** என்னும் பெரும்புலவர்கட்குப் பிறகு தமிழ் நாட்டில் தோன்றிய மாபெரும்புலவர் பலருள்ளும் **மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்** சிறப்பித்துக் கூறத்தகுந்தவர். இப்புலவர் எழுபத்தொன்பது நூல்களை இயற்றியுள்ளார். இவர் இயற்றிய பாட்டின் தொகையையும், அவற்றில் மலிந்து காணப்படும் சொற்சுவை பொருட்சுவைகளையும் நோக்கினால், இவரைப் '**பத்தொன்பதாம் நூற்றாண்டின் கம்பர்**' எனல் பொருந்தும்.

2. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, 1815-ஆம் ஆண்டில் **சிதம்பரம் பிள்ளை** என்பவர்க்கும் **அன்னத்தாச்சி** என்பவர்க்கும் அரிய மகவாய்த் தோன்றினார். இவருக்குச் **சொக்கலிங்கம்** என்ற தம்பியாரும், **மீனாட்சி** என்ற தங்கையாரும் இருந்தனர்.

3. பிள்ளையவர்களுடைய தந்தையார் தமிழ்ப் புலவராதலின், தம் மைந்தரை இளமை முதற்கொண்டே பல தமிழ் இலக்கியங்களை ஓதி உணரச் செய்தார் ; யாப்பிலக்கணத்தையும் நன்கு கற்பித்துச் செய்யுள் இயற்றுவதிலும் வல்லவராக்கிவிட்டார். எனவே, இளமையிலேயே பிள்ளையவர்கள் அழகிய தமிழ்ப்பாக்களை இயற்றி, இளம்புலவராய் விளங்கினார்.

4. மீனுட்சி சுந்தரம் பிள்ளை **காவேரியாச்சி** என்ற மங்கை நல்லாரை மணந்து, **திரிசிரபுரத்திற்** குடியேறி, மாணவர் பலர்க்குத் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்பித்து வந்தார். அக்காலை இவர் அடிக்கடி **திருவாவடுதுறைக்குச்** சென்று, தமது புலமையை வெளிப்படுத்தி, மடத்துத் தலைவரால் பாராட்டப்பட்டு வந்தார். செல்வர் பலரின் விருப்பப்படி இவர் பல சிவதலங்களுக்குத் தல புராணங்களும், **அந்தாதி, மாலை, பிள்ளைத் தமிழ்** முதலிய பல வகையான சிறு பிரபந்தங்களும் இயற்றிச் 'சீரும் சிறப்பும் பெற்று, செல்வர்களின் பொருள் உதவியையும் ஆதரவையும் அடைந்து வாழ்ந்து வந்தார்.

5. இவர் சென்னையை அடைந்து, அங்கு அக்காலத்தில் வாழ்ந்த பெரும்புலவர்களைக் காண அவலுற்ருர் ; அவ்விருப்பம் நிறைவேறத்தக்க ஒரு வாய்ப்புக் கிடைத்தமையால், சென்னையை அடைந்தார். ஆண்டிருந்த அரும்பெரும்புலவர்களாகிய **காஞ்சீபுரம் சபாபதி முதலியார், மழவை மகாலிங்க ஐயர்** முதலியவர்களைக் கண்டு, அவர்களுடன் சின்ஞள் உறைந்து, அவர்தம் நட்பினையும் பெற்ருர்.

6. சென்னையை விட்டுத் திரிசிரபுரம் மீண்ட மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள், வழக்கம் போல மாணவர் பலர்க்குத் தமிழ் கற்பிப்பதும், நூல்கள் எழுதுவதும், அவற்றை அரங்கேற்றம் செய்வதுமாகக் காலங்கழித்து வந்தார். பிள்ளையவர்களின் இல்லம் எந்நேரமும் புலவர்களும் மாணவர்களும் நிறைந்ததாகவே காட்சியளிக்கும். தாம் பாடிய செய்யுட்களைக் கொண்டு வந்து பிள்ளையவர்களிடம் திருத்திக்கொண்டு போகும் புலவர் சிலர். தம் நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பெற அவரை நாடி வருபவர் சிலர்.

தமக்கேற்பட்ட ஐயங்களைப் போக்கிக்கொள்ள வருப-வர் சிலர். படிக்க வரும் மாணவர் பலர். பிள்ளையவர்-களுடன் உரையாடித் தமிழ் அமுதத்தை அள்ளிப்பருக வரும் அறிஞர் பலர். தாம் வாழும் பதியைச் சிறப்பித்-துத் தல புராணங்களும், சிறு நூல்களும் இயற்றி-யருளுமாறு வேண்டிக்கொள்ள வரும் செல்வர் சிலர். இவ்வாறு அவர் வீடு தமிழ் மாணவர்களும், தமிழ் அறிஞர்களும், தமிழ் அபிமானிகளும் எப்போதும் நிறைந்து தமிழ்ச்சங்கம் போன்று விளங்கும்.

7. மீனாட்சிசுந்தரம் பிள்ளை கல்வியில் பேரூக்-கம் உள்ளவர். தாம் கற்றவை நீங்க, மற்ற நூல்கள் எல்லாவற்றையும். பாடம் கேட்க வேண்டும் என்ற பேராவல் நிரம்பியவர். ஆதலால், அவர் பல நூல்-களைத் திருவாவடுதுறை மடத்துத் தலைவர் **அம்பல-வாண தேசிகரிடம்** பயின்றார். இவ்வாறு தாம் கற்-றும், கற்றவற்றைப் பிறர்க்குக் கற்பித்தும், கற்றார்க்-கேற்பட்டு வந்த ஐயங்களைக் களைந்தும் வந்ததோடு நின்றுவிடாமல், ஆங்காங்குச் சென்று புராணப் பிரசங்கங்களும் செய்து வந்தார்.

8. பிள்ளையவர்களிடம் பாடம் கேட்ட மாணவர் பலர். அவர்களுள் சிறப்பித்துக் கூறத் தக்கவர் **பூவாளூர்த் தியாகராசச் செட்டியாரும், உத்தம தானபுரம் சாமிநாத ஐயருமேயாவர்.** இவ்விரு-வரும் பிள்ளையவர்களிடம் வெவ்வேறு காலத்தில் பாடம் கேட்டவர் ; அக்கால முறைப்படி ஆசிரியரை இடைவிடாமல் நிழல் போல உடனிருந்து அவருக்கு அரிய பணிவிடைகள் புரிந்து பாடம் கேட்டுப் புலமை அடைந்தவர். பிள்ளையவர்கள் இனம், குலம், சமயம் என்ற வேறுபாடுகள் கருதாமல், அனைவர்க்கும் பாடம் கற்பித்து வந்தவர். எனவே, **குலாம் காதிறு**

**நாவலர்** என்ற முஸ்லிமும், **சவரிராயர்** என்ற கிறித்தவரும் பிள்ளையவர்களிடம் தமிழ் பயின்றனர்.

9. அக்காலத்தில் **மாயூரம் வேதநாயகம் பிள்ளை** என்ற பெரியார் பிள்ளையவர்கட்கு ஆருயிர் நண்பராயிருந்தார். அவர் தமிழறிவு மிக்கவர்; தமிழ்ச்செய்யுட்கள் பலவற்றை இயற்றியவர். அவர் மாயூரத்தில் முனிசீப்பு வேலைக்கு மாற்றப்பட்ட போது, மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களும் திரிசிர-புரம் விட்டுத் தம் நண்பர் வேதநாயகம் பிள்ளையவர்-கள் விருப்பப்படி மாயூரத்தில் குடி புகுந்தார். அவ்-வூர்ச் செல்வர்கள் பிள்ளையவர்கள் மாயூரத்தில் நிலைத்து வாழ்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்-தார்கள். பிள்ளையவர்கள் அங்குச் சொந்தத்தில் இல்லம் ஒன்றை விலைக்கு வாங்கிக்கொண்டு, அதில் உறைந்து வந்தார்.

10. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடு-துறை மடத்துத் தலைவரிடம் சில நூல்கள் பயின்றது போல, மடத்திலிருந்த தம்பிரான்களும் மற்றவரும் பிள்ளையவர்களிடம் பல நூல்களைப் பாடங்கேட்டு வந்தார்கள். இக்காரணம் பற்றிப் பிள்ளையவர்கள் திருவாவடுதுறை ஆதீனப் புலவராய் அமரும் பேறு பெற்றார். பின்பு அம்மடத்துத் தலைவர் பிள்ளையவர்-கட்கு '**மகாவித்துவான்**' என்னும் பட்டம் வழங்கி, அவரைச் சிறப்பித்தார்.

11. பிள்ளையவர்கள் இளமை முதலே நல்லியல்-புகள் வாய்க்கப் பெற்றவர். கள்ளங்கபடற்றவர்; மறந்தும் பொய் பேசாதவர்; ஊக்கமும் உழைப்பும் மிக்கவர்; வைகறையில் துயிலெழுவதும், நடந்தால் ஓசையெழாமல் மென்மையாக நடப்பதும் பிள்ளை-யவர்களுக்கு வழக்கம். கடிந்து பேசும் வழக்கம்

அவரிடம் இல்லை. அவர் மித உணவே கொள்பவர் ; அவர் உழைப்புத்தான் இன்று தமிழகத்தில் தலத்துக்கொரு புராணம் விளங்குவதற்குக் காரணமாகும்.

12. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் எந்த ஊருக்குச் சென்றாலும், நடந்தே செல்வார் ; அப்படிச் செல்லும் போது இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழ்வார் ; அவற்றைத் தம் நூல்களிலும் புகுத்துவார். அவர் எங்குச் சென்றாலும் மாணவர் குழாம் அவரைத் தொடர்ந்த வண்ணமே இருக்கும். பாடம் சொல்வதற்கென ஒரு குறிப்பிட்ட நேரத்தை அவர் ஒதுக்கியதே இல்லை. பயணம் போகும் போது வழியிலேயே பாடம் சொல்வார். நீராடும் போதும், எண்ணெய் தேய்த்துக்கொள்ளும் போதும் அவர் பாடம் சொன்னதுண்டு. எல்லா நூல்களும் அவருக்கு மனப்பாடமாதலின், எங்கும், எப்போதும் அவ்வாறு பாடம் சொல்ல அவரால் முடிந்தது.

13. பிள்ளையவர்கள் மாயூரத்தில் தங்கியிருந்த போதுதான் சாமிநாத ஐயரவர்கள் அவரிடம் தமிழ் கற்க வந்தார். அப்போது ஐயருக்கு வழங்கி வந்த பெயர் **வேங்கடராமன்** என்பது. பிள்ளையவர்கள் அப்பெயரை மாற்றி, **சாமிநாதன்** என்று பெயர் வழங்கினார். அதுவே அவருக்கு நிலைபெற்று விளங்கலாயிற்று.

14. சாமிநாத ஐயர் **உத்தமதானபுரத்தில் வேங்கட சுப்பையர்** என்ற வேதியருக்கும், **சரசுவதியம்மாளுக்கும்** 1855-ஆம் ஆண்டில் பிறந்தார். அவர் தந்தையார் இசையில் வல்லவராதலின், ஐயர் இளமையில் தம் தந்தையாரிடம் இசையையும், **அரியலூர்ச் சடகோப ஐயங்கார்** என்பவரிடம் தமிழையும் பயின்றார் ; பிறகு பல வித்துவான்களிடம்

தமிழ் பயின்றும் தமது தமிழ்ப்பசி தணியாமல், 1871-ஆம் ஆண்டில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்



பிள்ளையவர்களையடுத்து, தமிழ் பயிலத் தொடங்கியது முதல் நிழல் போல அவரை நீங்காதிருந்து, இலக்கிய இலக்கணங்களைப் பயின்றார். பிள்ளையவர்கள் 1875ல் விண்ணுலகெய்திய பின், ஐயர் திருவாவடுதுறை ஆதீனகர்த்தராய் இருந்த **சுப்பிரமணிய தேசிக**ரிடம் பல நூல்களைப் பாடம் கேட்டார்.

15. 1880ல் கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராயிருந்த தியாகராச செட்டியார், வயது முதிர்ச்சியால் வேலையினின்று ஓய்வு பெற்ற போது, ஐயரைத் தமக்குப் பதில் தமிழாசிரியராக அமர்த்திவிட்டு நீங்கினார். அது முதல் ஐயர் கல்லூரியில் சிறந்த முறையில் பாடங்கற்பித்து வந்தார். அக்காலை கும்பகோணத்தில் உயர்ந்த பதவியில் இருந்த **சேலம் இராமசாமி முதலியா**ரின் நட்பு அவருக்கு ஏற்பட்டது. முதலியார் தமிழ்ச்சுவையறியும் ஆற்றல் நிரம்பியவராதலால், அதுவரை அச்சிடப்பெறாத **சிந்தாமணி** முதலிய பழந்தமிழ் நூல்களை அச்சேற்றித் தமிழ் உலகத்துக்கு உபகரிப்பது நலமெனக் கூறி, ஐயர் அவர்களை அப்பணியில் ஊக்கினார்; அன்றியும், தம்மிடமிருந்த சிந்தாமணி முதலிய சில ஏட்டுச் சுவடிகளையும் கொடுத்தார்.

16. அது முதல் ஐயரவர்கள் பழந்தமிழ் நூல்களை ஆராயத் தொடங்கி, 1887ல் முதன்முதல் **சீவக சிந்தாமணி**யை அச்சேற்றி வெளியிட்டார். பிறகு **பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு** முதலிய நூல்கள் வெளி வந்தன. 1903-ஆம் ஆண்டில் ஐயரவர்கள் சென்னையில் உள்ள **மாகாணக் கல்லூரி**க்கு மாற்றப்பட்டார். சென்னைக்கு வந்த பிறகும் அவர் தொடர்ந்து பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும் பணியில் தம் காலத்தைச் செலவிட்டு வந்தார். 1919–ஆம் ஆண்டில், தமது 64–ஆம் வயதில் ஐயரவர்கள் ஓய்வு பெற்று, உபகாரச் சம்பளமும் பெற்றார். அவர் சென்னைக்கு வந்த பிறகு **பதிற்றுப்பத்து, பரிபாடல், பெருங்கதை** என்னும் நூல்கள் வெளியிடப்பெற்றன.

17. ஐயர் மாகாணக் கல்லூரியினின்றும் ஓய்வு

பெற்ற பின்னர், சிதம்பரத்தில், **ராஜா சர். அண்ணாமலை செட்டியாரின்** விருப்பத்திற்கிணங்கி, அவரால் நிறுவப்பெற்ற **மீனாட்சித் தமிழ்க் கல்லூரி-**யின் தலைமைப் பேராசிரியராயமர்ந்து, நான்காண்டு தொண்டாற்றினார்; அதன் பிறகு ஓய்வு பெற்றுச் சென்னையை அடைந்து, வழக்கம் போலப் பழந்-தமிழ் நூல்களை ஆராய்ந்து அச்சிடும் தொண்டை மேற்கொண்டார். அவர் தமிழுக்குச் செய்த அரிய தொண்டினை அறிந்த அரசியலார், 1906ல் அவருக்கு **'மகாமகோபாத்தியாயர்'** என்னும் பட்டத்தையும், 1932ல் சென்னைப் பல்கலைக் கழகத்தார் **'டாக்டர்'** என்னும் பட்டத்தையும் வழங்கினர். தமிழ்க் கடலில் திளைத்த தனிப் பெரும் புலவரான ஐயரவர்களின் உருவச்சிலை, மாகாணக் கல்லூரியின் தென்கோடியில் கடலை நோக்கிக் காட்சியளித்துத் திகழ்கின்றது. ஐயரவர்கள் எண்பது வயதுக்கு மேலும் தமிழ்த்தொண்டாற்றி இறைவனடியிற்சேர்ந்தார்.

18. ஐயரவர்கள் மிக்க நன்றியறிதல் உள்ளவர். அவர் **மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை சரிதம்** என்னும் பெயரால் இரண்டு பாகங்களில் தம் ஆசிரியர் வரலாற்றை எழுதித் தமது நன்றியைத் தெரிவித்தார். அன்றியும், சென்னையில் தமக்குச் சொந்தமான வீட்டுக்குத் **'தியாகராாச விலாசம்'** என்னும் பெயர் வழங்கித் தமக்குத் தமிழாசிரியர் பதவியை வாங்கி அளித்த தம் நண்பருக்குத் தமது நன்றியைத் தெரிவித்தார். ஐயரவர்கள் தமிழுக்குச் செய்த தொண்டினைப் பாராட்டித் தமிழர் எந்நாளும் அவருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டவராவர். அவர் முயற்சியில்லையேல், பல அரிய தமிழ் நூல்கள் வெளி வந்திரா.

## பயிற்சி :

**1. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—**

இதிகாசம், புராணம், ஓதி உணர, யாப்பிலக்கணம், சின்னாள், அரங்கேற்றம், பேரூக்கம், களைந்து, உறைவாராயினர், தணியாமல், உபகரிப்பது, ஊக்கினார், அரிய, கடமைப்பட்டவ-ராவர், மகாமகோபாத்தியாயர், சிறப்புப்பாயிரம்.

**2. வாக்கியங்களில் அமைக்க :—**

எந்நேரமும், ஆங்காங்கே, நிழல் போல, பெரும்பாலும், குடியேறி.

**3. விடை எழுதுக :—**

(அ) பிள்ளையவர்களைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் கம்பர் எனல் எவ்விதம் பொருந்தும் ?

(ஆ) பிள்ளையவர்களின் குடும்பத்தைப் பற்றிய வரலாறு யாது ?

(இ) அவர் காலப் பெரும்புலவர் யாவர் ?

(ஈ) பிள்ளையவர்களின் தமிழ்ப்பணி எவ்வாறு நடை பெற்றது ?

(உ) பிள்ளையவர்களின் அருங்குணங்கள் யாவை ?

(ஊ) ஐயரவர்களின் இளமைப்பெயர் யாது ?

(எ) ஐயரவர்களைப் பதிப்புத்தொண்டில் ஊக்குவித்தவர் யார் ?

(ஏ) ஐயரால் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் எவை ?

(ஐ) ஐயரவர்கள் நன்றி மறவாதவர் என்பதை எதனால் அறியலாம் ?

**4. இப்பாடத்திலிருந்து உதாரணங்கள் தருக :—**

| தன்மை ஒருமை | தன்மைப் பன்மை | முன்னிலை ஒருமை | முன்னிலைப் பன்மை | படர்க்கை ஒருமை | படர்க்கை- பன்மை |
|---|---|---|---|---|---|
| | | | | | |

## இலக்கணம் :

### பெயர்ச்சொல்லில் அறிய வேண்டுபவை :

(தொடர்ச்சி)

## வேற்றுமை :

1. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) குயில்
(2) குயில் கூவியது.

‘ குயில் ’ என்பது பெயர்ச்சொல். இது தன் இயல்பில் ஒரு பறவையைக் குறித்தது.

‘குயில் கூவியது,’ என்பதில் குயில் என்னும் பெயர்ச்சொல், ஒரு பறவையைக் குறிக்கும் பொருளோடு, ‘ கூவியது ’ என்னும் வினைக்குக் கருத்தாவாகும் பொருளையும் பெற்றது. எனவே, இங்கு ஒரு பெயர்ச்சொல் தன் பொருளோடு வேறு ஒரு பொருளையும் ஏற்றுக்கொண்ட வேறுபாடே ‘ வேற்றுமை ’ எனப்படும். இந்த வேறுபாட்டைக் குறிக்க வரும் அடையாளங்கள், உருபுகள் எனப்படும்.

குறிப்பு :—முதல் வேற்றுமைக்கும் எட்டாம் வேற்றுமைக்கும் உருபுகள் இல்லை.

மனப்பாடம் செய்க :

வேற்றுமை என்பது பெயர்ச்சொல்லின் பொருளை வேறுபடுத்துவது.

2. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) கண்ணன் வந்தான்.—முதல் வேற்றுமை. இது எவ்வித வேறுபாடும் அடையவில்லை. இதற்கு எழுவாய் வேற்றுமை என்னும் பெயரும் உண்டு.
(2) கண்ணனைக் கண்டேன்—(கண்ணன் + ஐ) ஐ இரண்டாம் வேற்றுமை உருபு.
(3) கண்ணனுல் தரப்பட்டது. (கண்ணன் + ஆல்)
கண்ணனேடு வந்தான். (கண்ணன் + ஓடு)

ஆல், ஆன், ஒடு, ஓடு, உடன் என்பன மூன்றும் வேற்றுமை உருபுகள்.

(4) சிவனுக்கு மகன் முருகன். (சிவன் + கு) நான்காம் வேற்றுமை உருபு கு.

(5) காக்கையிற்கரிது களம்பழம் (காக்கை + இல்), திருச்சி-யின் வடக்குத் தஞ்சை. (திருச்சி + இன்), வீட்டி-னின்று வந்தேன். (வீட்டின் + நின்று), வீட்டி-லிருந்து வந்தேன். (வீட்டில் + இருந்து)

இல், இன், நின்று, இருந்து என்பன ஐந்தாம் வேற்றுமை உருபுகள்.

(6) கண்ணனது புத்தகம். (கண்ணன் + அது), கண்ண னுடைய பொருள்கள் (கண்ணன் + உடைய).

ஆறும் வேற்றுமையின் உருபுகள் அது, உடைய என்பன.

(7) கையின்கண் விரல் (கையின் + கண்)
மரத்தில் கிளி (மரம் + இல்)
பெட்டியுள் பணம் (பெட்டி + உள்)
என்னிடம் பணம் (என் + இடம்)

ஏழாம் வேற்றுமை உருபு கண், இல், உள், இடம் முதலியன.

(8) குழந்தாய், வா. (குழந்தை—இதில் உள்ள ' தை ' ' தாய் ' எனத் திரிந்தது.) அன்ப, தருக. (அன் பன் என்பதில் உள்ள ன் கெட்டது.) மகனே, போ. (மகன் என்பதுடன் ' ஏ ' என்பது மிகுந்தது.)

எட்டாம் வேற்றுமைக்கு உருபு இல்லை. இதன் ஈறு (கடைசி எழுத்து) திரிந்தாவது, கெட்டாவது, மிகுந்தாவது விளிப்பொருளை (கூப்பிடும் அர்த்தத்தை) உணர்த்தும். எனவே, எட்டாம் வேற்றுமை விளிவேற்றுமை எனப்பட்டது.




## 7. ஆசாரியா பிரபுல்ல சந்திர ரே

1. உலகில் இக்காலத்தில் காணப்படும் விந்தைப் பொருள்கள் அனைத்தும், வெவ்வேறு நாட்டு விஞ்ஞானிகளின் இடையரு முயற்சியின் நற்பயனே-யாம். இத்தகைய விஞ்ஞானிகளுள் சிலரை உல-குக்கு நல்கிய பெருமை, நமது நாட்டுக்கும் உண்டு. பி. சி. ரே. என்பவர் உலகப் பிரசித்தி பெற்ற இந்திய

விஞ்ஞானிகளுள் ஒருவர். அவர் இரசாயனக் கலையில் வல்லுநராய் விளங்கித் தமது தாய் நாட்டுக்குப் பேரும் புகழும் தேடித் தந்தவர்.

2. பி. சி. ரேயின் முழுப் பெயர் **ஆசாரியா பிரபுல்ல சந்திர ரே** என்பது. அவர் கங்கை என்னும் கடவுள் மாநதியால் வளம்படுத்தப்படும் வங்காள நாட்டில், **ஜெசூர் ஜில்லா**வில், **இராகுலி** என்னும் கிராமத்தில், 1861ல், பாரத தேவியின் தவப்புதல்வர்களுள் ஒருவராய்த் தோன்றினர். வங்கநாட்டு ஜமீந்தார்களுள் ஒருவரான அவர் தந்தையார், மைந்தரின் கல்வி முன்னேற்றம் கருதிக் கல்கத்தாவிற் குடிபுகுந்தார். அங்குப் பிரபுல்லரும் அவர்தம் தமையனரும் ஆங்கிலப் பள்ளியொன்றில் கல்வி பயிலத் தொடங்கினர். அப்போது பிரபுல்லருக்கு வயது பத்தே.

3. 'விளையும் பயிர் முளையிலே,' என்னும் முதுமொழிக்கிணங்கப் பிரபுல்லர் எப்போதும் தமது கல்வியிற் கண்ணும் கருத்துமாய் இருந்தார். அதன் பயனாக அவர் தமது பதின்மூன்ரும் வயதில் சரித்திரம், தரை நூல், ஆங்கிலம் ஆகிய பாடங்களை நன்கு பயின்று, முதற்பரிசு பெற்று, ஆசிரியரையும் பெற்றோரையும் மகிழ்வித்தார்; அப்போது **ஷேக்ஸ்பியர்** என்னும் ஆங்கில நாடகக் கவியின் நாடக நூல்களிற் சில சிறந்த பகுதிகளை நெட்டுருப் பண்ணிக் கேட்பவர் வியக்குமாறு உணர்ச்சி ததும்ப ஒப்புவிக்கும் ஆற்றல் பெற்று விளங்கினர்.

4. பிறகு பிரபுல்லர் **கேசவ சந்திர சேனர்** என்பவரால் நிறுவப் பெற்ற **ஆல்பர்ட்டுப் பாடசாலை**யிலும், **ஈசுவர சந்திர வித்தியாசாகரர்** தோற்றுவித்த **மெட்ரோபாலிட்டன் கலாசாலை**-

யிலும் சிற்சில ஆண்டுகள் பயின்ற பின்னர், கல்கத்தாவில் உள்ள **மாகாணக் கல்லூரியில்** சேர்ந்தார். அங்கு அவர் இரசாயனக் கலையில் தனிப் பயிற்சியை மேற்கொண்டார்; பி. ஏ. வகுப்பில் படித்துக்கொண்டிருந்த போது, **கில்கிரைட்டு** என்பவரின் நன்கொடைத் தேர்விற்கலந்துகொண்டு முதல்வராய்த் தேறினர். அந்த நன்கொடையைப் பெற்ற பிரபுல்லர், இங்கிலாந்து சென்று, அங்கு விஞ்ஞானக் கலை பயின்று, **பி. எஸ். ஸி.** பட்டமும், பிறகு **டாக்டர்** பட்டமும் பெற்றார். 1888-ஆம் ஆண்டில் அவர் இங்கிலாந்தை விட்டுத் தமது தாய் நாடு வந்து சேர்ந்தார். மறு ஆண்டிலேயே பிரபுல்லர் **கல்கத்தாப் பிரசிடென்சிக் கல்லூரியில்** உதவிப் பேராசிரியர் பதவியைப் பெற்றார்.

5. பிரபுல்லர் இரசாயனக் கலையில் தமது நாட்டத்தைச் செலுத்தியதோடு தேசத் தொண்டிலும், ஏழை மக்களின் துன்ப நிவர்த்தியிலும், இந்தியக் கைத்தொழில் அபிவிருத்தியிலும் நாட்டம் செலுத்தினர். ஆண்டுதோறும் அயல் நாடுகளினின்றும் நமது நாட்டில் இறக்குமதியாகும் மருந்து வகைகளுக்காக ஏழைகளான இந்திய மக்கள் பெருந்தொகை இறை செலுத்துவது போலச் செலுத்துவதை அவர் ஆய்ந்தறிந்தார்; அம்மருந்துகள் எல்லாவற்றையும் இந்தியாவிலேயே செய்வது, இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்குத் துணை புரியுமென்பதைக் கண்டார்; காலந்தாழ்த்தாமல் ஒரு சிறு மூல தனத்துடன் ஓர் இரசாயன மருந்துத் தொழிற்சாலையைத் தோற்றுவித்தார். அஃது இப்பொழுது பல்லாற்றானும் சிறப்புற்று விளங்குகின்றது.

6. பிரபுல்லர் 1894-ஆம் ஆண்டுக்குப் பிறகு,

இரசாயன ஆராய்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டார். அதன் பயனுக, அவர் **மார்குரஸ் நைட்ரைட்டு** என்னும் இரசாயனக் கலவைப்பொருளைக் கண்டு பிடித்த போது, அவரது பேரும் புகழும் உலகெங்கும் பரவலாயின. அதன் பின்னர், அவர் **இந்து இராசயனக் கலை வரலாறு** என்னும் நூலை எழுதத் தொடங்கினர். அதற்கு வேண்டிய செய்திகளைத் திரட்டுவதற்கு அவர் பட்ட இன்னல்கள் விவரிக்க முடியாதவை. இறுதியில் அந்நூல் வெளிப் போந்த போது அவருடைய புகழ் மேலும் வளர்ந்தோங்க-லாயிற்று.

7. அதன் பின்பு பிரபுல்லர் **இலண்டன், பாரிஸ், பெர்லின், ஜினிவா** என்னும் புகழ் மிக்க பட்டணங்களுக்குச் சென்று, ஆங்காங்குள்ள சிறந்த இரசாயனச் சாலைகளைக் கண்ணுற்றுத் திரும்பினர். பிறகு ஐரோப்பாவில் நடைபெற்ற பிரிட்டிஷ் சாம்ராஜ்ய சர்வ கலாசாலைகளின் மகாநாட்டுக்குக் கல்கத்தாச் சர்வ கலாசாலையின் பிரதிநிதியாகச் செல்லும் பெரும்பேறும் அவருக்குக் கிடைத்தது. அப்போது அவர் அம்மாநாட்டில் தமது புதிய ஆராய்ச்சியைப் பற்றிய அரியதொரு கட்டுரையைப் படித்து, இந்தியாவின் புகழை நிலை நாட்டினர்.

8. **சர். தாரக நாத 'பாலிதர்** என்னும் உபகாரி வழங்கிய மூலதனத்தைக் கொண்டு 1916ல் நிறுவப் பெற்ற **பௌதிகக் கலை ஆராய்ச்சிக் கலாசாலை**யின் இரசாயனக் கலைத் தலைமைப் பேரா-சிரியர் பதவி பிரபுல்லரைத் தேடி வந்தடைந்தது. அவர் இரசாயன ஆராய்ச்சியோடு நின்றுவிடாமல், நாட்டு முன்னேற்றங்கருதி இடைவிடாமல் உழைத்து வந்துள்ளார். அவர், 'இந்தியாவில் கிடைக்கும்

மூலப் பொருள்களை இந்தியாவிலேயே செய்பொருளாக்க வேண்டும்; அதனால், இந்திய மக்கள் அப்பொருள்களைக் குறைந்த விலைக்குப் பெற்று, அதிக இலாபம் அடைவார்கள். அதன் மூலம் இந்தியாவின் வாணிகமும் கைத்தொழிலும் ஆக்கமுறும், ' என்னும் ஒப்பற்ற பொருளாதார உண்மைகளை அடிக்கடி கூறுவது வழக்கம். பிரபுல்லர் தமது காலத்தைத் திருமணமின்றியே கழித்துவிட்டார். ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையே அவருக்கு இன்பம் நல்கி வந்தது. அவரது வாழக்கை இந்திய மக்களுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்குகின்றது. அவர் சில ஆண்டுகளுக்கு முன் இறைவனடி எய்தினரெனினும், அவர் தமது நாட்டுக்குப் புரிந்த நற்றொண்டுகள் என்றும் மறக்கற்பாலன அல்ல.

### பயிற்சி :

**1. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—**

விந்தைப்பொருள்கள், நல்கிய, பிரசித்தி பெற்ற, குடி புகுந்தார், நெட்டுருப்பண்ணி, பயின்ற, இறை செலுத்துவது, பல்லாற்றானும், பரவலாயின, கண்ணுற்று, நிலை நாட்டினர், மூலப்பொருள், மறக்கற்பாலன.

**2. வாக்கியங்களில் அமைக்க :—**

பேரும் புகழும், கல்வி பயில, கண்ணுங் கருத்துமாய், ஆற்றல் பெற்று, நிறுவப்பெற்ற, ஆய்ந்தறிந்தார், எண்ணிறந்த, காலந்தாழ்த்தாமல், இடை விடாமல்.

**3. விடை எழுதுக :—**

(அ) ரே அவர்களின் பள்ளி வாழ்க்கையைப்பற்றி நீ அறிவது யாது ?

(ஆ) அவர் ஏன் இரசாயன மருந்துத் தொழிற்சாலையைத் தோற்றுவித்தார் ?

(இ) அவர் இயற்றிய நூலின் பெயர் என்ன ?
(ஈ) அவருடைய பண்புகள் எத்தன்மையன ?

4. வேற்றுமை உருபுகளை எடுத்து எழுதுக :—

(அ) இராமனோடு சீதை வந்தாள்.
(ஆ) கூலிக்கு வேலை செய்தான்.
(இ) கல்லால் அடித்தான்.
(ஈ) ஆசிரியரைக் கண்டேன்.
(உ) சென்னையின் தெற்கு அடையாறு.
(ஊ) பள்ளியில் நூல் நிலையம் உண்டு.
(எ) என்னுடைய புத்தகங்கள் எங்கே ?
(ஏ) தனது கையே தனக்கு உதவி.
(ஐ) தடியால் தட்டினான்.
(ஒ) உன்னை யார் கேட்டது ?

## இலக்கணம் :

### வினைச்சொல்

## முற்று வினை

1. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

கண்ணன் வந்தான்.

இவ்வாக்கியத்தில் ' வந்தான் ' என்னும் சொல், கண்ணன் என்னும் பொருளின் ' வருதல் ' என்னும் செயலைக் குறிக்கிறது; அன்றியும், அச்செயல் முற்றுப் பெற்றதையும் குறிக்கிறது; மேலும், அச்செயல் நடந்த காலத்தையும் காட்டுகிறது.

எனவே, ஒரு சொல் ஒரு பொருளின் செயலையும் அச்செயலின் காலத்தையும் காட்டினால், அது வினைச்சொல்லாம். அது பொருள் முடிந்து நிற்பின் ' முற்று வினை ' எனப்படும்.

2. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

விழுந்த பையன் எழுந்து நின்றான்.

இவ்வாக்கியத்தில் உள்ள விழுந்த, எழுந்து என்னும் சொற்களும் வினைகளே. ஆனால், அவை பொருள் முடியாமல் உள்ளன. அவை எச்சவினை எனப்படும். அவற்றுள் 'விழுந்த'

என்னும் எச்சவினை பொருள் முடிவதற்குப் 'பையன்' என்னும் பெயர்ச்சொல்லை வேண்டி நிற்கின்றது. இவ்வாறு பெயரோடு சேர்ந்து பொருள் முடியும் எச்சவினை 'பெயர் எச்சம்' எனப்படும்.

'எழுந்து' என்னும் எச்சவினை பொருள் முடிவதற்கு 'நின்ருன்' என்னும் வினைச்சொல்லை வேண்டி நிற்கின்றது. இவ்வாறு மற்றொரு வினையோடு சேர்ந்து பொருள் முடியப்பெறும் எச்சவினை 'வினை எச்சம்' எனப்படும்.




3. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) மன்னன் வந்தான். — இறந்த காலம்
(2) மன்னன் வருகிருன். — நிகழ்காலம்
(3) மன்னன் வருவான். — எதிர்காலம்

'வந்தான்' என்னும் வினை, வருதலாகிய செயல் ஏற்கெனவே நிகழ்ந்துவிட்டதைத் தெரிவிக்கிறது ; எனவே, இறந்தகால வினை.

'வருகிருன்' என்னும் வினை, வருதலாகிய செயல் இப்போது நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்பதைத் தெரிவிக்கிறது; எனவே, நிகழ்கால வினை.

'வருவான்' என்னும் வினை, வருதலாகிய தொழில் இனி நடக்கப்போவதைத் தெரிவிக்கிறது ; எனவே, எதிர்கால வினை.

இவ்வாறு வினைச்சொல் இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலத்துள் ஒன்றைக் குறிக்கும்.

குறிப்பு :— பெயர்ச்சொல், காலம் காட்டாது ; வேற்றுமை ஏற்கும்.

வினைச்சொல், காலம் காட்டும் ; வேற்றுமை ஏற்காது.

## 8. உலக அதிசயங்கள்

1. உலகத்தில் இன்று நாம் காணும் அற்புதங்கள் பல. விஞ்ஞானப் பேரறிஞர்கள் அப்போதைக்கு அப்போது பல அற்புதங்களை வெளிப்படுத்திக்கொண்டே இருக்கின்றனர்கள். மின்சாரத்தின் பயனாக நாம் பயன்படுத்தி வரும் பொருள்களையெல்லாம் அற்புதம் என்னலாம் அல்லவா? மின்சார விளக்குகள், விசிறிகள், 'ரேடியோ' எனப்படும் வானொலி, நெடுந்தொலையில் நடப்பவற்றை நம் வீட்டிற்குள்ளிருந்த வண்ணம் பார்க்கும் கருவியாகிய '**டெலிவிஷன்**', தொலையில் இருப்பவர்களுக்குச் செய்தி தெரிவிக்கத் துணை புரியும் கம்பியில்லாத் தந்தி, வானவூர்திகள், நீர் மூழ்கிகள் முதலியவைகளை அற்புதங்கள் என்பதில் தவறு இல்லையன்றோ ?

2. விஞ்ஞானம் இவ்வுலகுக்கு அளித்துள்ள அற்புதங்கள் மிகப் பல. இன்னும் நாம் நினைக்காத பல அற்புதங்களை அவ்வப்போது வெளியிட்ட வண்ணம் இருக்கின்றது. மருத்துவத் துறையிலும், இயந்திரத் துறையிலும், மற்றைத் துறையிலும் நிலத்திலும் நீரிலும் வானிலும் விஞ்ஞானிகள் நிகழ்த்தி வரும் அற்புதங்கள் மிகப்பல ஆகும்.

3. ஆனால், இவையனைத்தும் அன்றாட வாழ்க்கையில் பயன்படும் வண்ணம் இருக்கின்றமையாலும், நாம் இவற்றை அடிக்கடி கண்ட வண்ணமிருப்பதாலும் நாம் இவற்றை அற்புதங்களாகக் கருதுவதில்லை. எனினும், இவற்றைக் காணாத மக்கள் கண்டால், "அற்புதம் ! அற்புதம் !" என்று வியப்படைவார்கள் அல்லவா ? திரையிலே நிழற்படம் பேசிப் பாடி ஆடுகிறது என்றால், அதன் அமைப்புக்களை

அறியாத மக்கள் வியப்படைவதில் அதிசயம் ஏதுமில்லை.

4. இவை போலப் பண்டைக் காலத்தில், உலக மக்கள் மனத்தில் அற்புதமாகத் தோன்றியவை சில உண்டு. அக்காலத்தில் விஞ்ஞான அறிவு பெருகாதிருந்தும், அப்பண்டை மக்கள் இயற்றியுள்ள அற்புதங்கள் சில, இன்னும் நம் கருத்தைக் கவர்வனவாயிருக்கின்றன. அவற்றுள் உலக அறிஞர் சிலவற்றை மட்டும் குறிப்பிட்டு, '**உலகின் ஏழு அதிசயங்கள்**' எனப் பெயரிட்டு, அவற்றைப் பற்றி விரிவாக எழுதி வைத்திருக்கின்றனர். உலக அதிசயங்கள் என்று பொதுப்படக் கூறினுல், அவைதாம் மக்கள் மனத்தில் தோற்றமளிக்கும். அவை, **கூர்நுதிக் கோபுரங்கள், அந்தர மலர்ச்சோலை, ஜுப்பிட்டர் கோயில், தயாளு கோயில், மாசோலியம், பாரோஸ் கலங்கரை விளக்கம், கொலாசஸ் சிலை** என்பனவாகும்.

5. **கூர்நுதிக் கோபுரங்கள்** எகிப்தில் இருக்கின்றன. இவற்றை ஆங்கிலத்தில் '**பிரமிடு**' என்கின்றனர். இவை நாற்கோணமாகவும், உச்சியில் கூம்பிய நுனியுடையனவாகவும் கட்டப்பட்டிருக்கின்றன. இவை மிக உயரமானவை. இவற்றுள் ஒன்று மிகப் பெரியதாகும். அஃது எகிப்து நாட்டின் தலைநகராகிய **கெய்ரோவின்** அருகில் இருக்கிறது. அதன் உயரம் நானூற்றைம்பது அடி. அதன்மீது ஏறப் படிகள் ஒழுங்காக அமைக்கப்பட்டில்லை. ஐந்தடிக் கற்கள் படி போல அமைக்கப்பட்டிருக்கின்றன. அதன் மொத்தப் பரப்பு ஐயாயிரத்துத் தொண்ணூற்று நாற்பது சதுர அடிகள்.

6. அந்த அதிசயக் கோபுரத்தை, '**கீயாப்ஸ்**'

என்னும் புனைபெயர் பூண்ட **கூபு மன்னன்** கட்டினான். அவன் ஐயாயிரத்தெழுநூறு ஆண்டுகளுக்கு




முன் எகிப்து நாட்டை ஆண்டவனும். அவன், தான் இறந்த பிறகு தன்னை அடக்கம் செய்யும் கல்லறையாகவே அதனைக் கட்டினான். அஃது இத்தனை ஆண்டுகளாக நிலைத்திருந்தும், சிறிதளவே சீரழிந்திருப்பதால், அதன் உறுதி நன்கு விளங்கும். அதன் அழகிய வேலைப்பாடுகளையும் அதன் உள்ளிருந்த விலையுயர்ந்த பொருள்களையும் பிற்காலத்தவர் பலர் பாழாக்கிவிட்டனர். எனினும், அஃது இன்னும் உலக அற்புதங்களுள் ஒன்றாய் விளங்குகிறது.

7. **பாபிலோன்** நகரத்தில் **அந்தரத்தில் தொங்**-

**கும் மலர்ச்சோலை** உலக அற்புதங்களுள் இரண்டாவது அற்புதம் என்னலாம். அம்மலர்ச்சோலையின் மதில்கள் சற்றேறக்குறைய முந்நூறு அடி உயரம்




இருந்தன. அச்சுவர்கள் இரண்டு பெரிய தெருக்கள் அமைக்கக் கூடிய அளவு அகலமாய் இருந்தன. அச்சுவர்கள்மீது காவலர் தங்க ஐம்பது கோபுரங்கள் கட்டப்பட்டிருந்தன. சுவர்கள்மீது தட்டுத் தட்டாய்த் தளங்கள் எழுப்பப்பட்டு, அவற்றில் மலர்ச்செடிகளும், பூங்கொடிகளும், கனி மரங்களும் வளர்க்கப்பட்டு, அழகிய பூங்காக்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் இடையில் எழில் மிக்க மாளிகை ஒன்று கட்டப்பட்டிருந்தது. அந்த அந்தர மலர்ச் சோலையையும் மாளிகையையும் உண்டாக்கியவன் **நெபுகத்துநெசார்** என்னும் மன்னனாவான். பாபிலோன் பாலைவனம் போலக் காட்சியளிப்பதாகத் தன் மனைவி வருந்தியதை அறிந்த அம்மன்னன், அவளை மகிழ்-

விக்கும்பொருட்டே அந்த அற்புதப் பூங்காவை அமைத்தான். ஆனால், அந்த அற்புதம் இன்று இருந்தவிடம் தெரியாமல் அழிந்துவிட்டது.

8. கிரேக்க நாட்டு **ஒலிம்பியா** நகரிலுள்ள **'ஜுப்பிட்டர் கோவில்'** மூன்றாவது அற்புதமாகக் கருதப்பட்டது. அது மிகுந்த எழிலுடன் அமைக்கப்பட்டிருந்தது. அதன் உள்ளேயிருந்த ஜுப்பிட்டர் என்னும் கிரேக்கக் கடவுளின் தந்த உருவம் வியப்பளிக்கும் வகையில் அமைந்திருந்தது. அந்த உருவம், அது வீற்றிருந்த அரியணை, பீடம் முதலியவை சேர்ந்து மொத்தம் அறுபதடி உயரம் இருந்தது. வெற்றுருவம் மட்டும் நாற்பத்து மூன்றடி உயரம் இருந்தது. அதன் மகுடம், செங்கோல், பாத பீடம் முதலியவை பொன்னாலும் விலையுயர்ந்த இரத்தினக் கற்களாலும், செய்யப்பட்டிருந்தன. அரியணை, கருங்காலி மரத்தாலானது. 'சிற்பிகளின் மன்னன்' எனச் சிற்ப நூல் வல்லார் புகழ்ந்து கொண்டாடிய **பித்தியஸ்** என்பான் அதனைச் செய்தானாம். அவ்வுருவத்திலும் பீடத்திலும் சரிவணையிலும் காணப்பட்ட சிற்ப எழில் இன்றும் இணை கூற இயலாததாம். அந்த அற்புதமும் இன்று இல்லை.

9. **எபேசு** நகரிலிருந்த **தயானா தேவியின் கோவில்** நான்காவது அற்புதமாகக் கருதப்பட்டது. அந்நகரில் **அயோனியர்** என்னும் யவன இனத்தார், கி. மு. 357-ஆம் ஆண்டில் தயானா தேவிக்குக் கோவில் எழுப்பினர் ; அதைக் கட்டி முடிக்க நூற்றிருபது ஆண்டுகள் ஆயினவாம். அக்கோவிலின் கருவறை மண்டபம் நானூறு அடி நீளமும் இருநூறு அடி அகலமும் உடையது. அம்மண்டபத்தைத் தாங்கி நின்ற நூற்றிருபத்தேழு தூண்களும் சிற்ப வேலைத்-

திறம் நிறைந்தவை. அவற்றுள் ஒவ்வொன்றும் அறுபத்தைந்தடி உயரமுடையது. உள்ளே இருந்த தயானு உருவம் வெண்சலவைக் கல்லில் பொன்னும் இரத்தினக் கற்களும் இழைத்துச் செய்யப்பட்டிருந்-தது. அதனை மற்றொரு சிற்ப வேந்தனான **பிராசி-**



மாசோலியம்

**திலஸ்** என்பான் அமைத்தான். அக்கோயிலைக் கொடுங்கோலனாகிய **நீரோ** மன்னன் கொள்ளையிட்-டழித்தான். '**காத்**' இன மக்கள், கி. பி. 262-ஆம் ஆண்டில் படையெடுத்து வந்து போரிட்ட போது அக்கோவிலை இடித்துத் தகர்த்தார்கள். அஃது இன்-னும் பாழடைந்த நிலையில் காட்சியளிக்கிறது.

10. **ஏஜியன்** கடற்கரையில் **அலிக்கர்நாசஸ்**

என்னும் இடத்திலிருந்த '**மாசோலியம்**' என்னும் நினைவு மண்டபம், ஐந்தாவது அற்புதமாகக் கருதப்படுகிறது. அந்நினைவு மண்டபம் ஒரு கல்லறை. **கெரியா** நாட்டு மன்னனுன **மாசோலஸ்** இறந்த போது அவன் பிரிவாற்ருத அவன் மனைவி, அந்த அதிசய மண்டபத்தைக் கட்டுவித்தாள். அது நூறு அடி உயரமுள்ள செய்குன்றின்மீது நூற்று நாற்பது அடி உயரமுடையதாகக் கட்டப்பட்டது. அம்மண்டபத்தைச் சுற்றிலும் முந்நூறு அடி அகலத் திருச்சுற்று இருந்தது. செய்குன்றைச் சூழ நூறடி உயரச் சலவைக்கற்படிகள் அமைக்கப்பட்டிருந்தன. மண்டபத் தூண்களில் இடையிடையே அழகிய உருவங்கள் அணியணியாய் நிற்குமாறு செதுக்கப்பட்டிருந்தன. அந்த அதிசய மண்டபம் கி.பி. நான்காம் நூற்றுண்டிற்குப் பிறகு அழிந்துவிட்டதெனினும், பிரிட்டிஷ் பொருட்காட்சி நிலையத்தில் அதன் 'மாதிரி' ஒன்று செய்து வைக்கப்பட்டிருக்கிறது.

11. எகிப்து நாட்டின் துறைமுகமாகிய **அலெக்ஸாண்டிரியா**வை அடுத்த **பாரோஸ் தீவில்** ஐந்நூற்றிருபது அடி உயரத்தில் கட்டப்பட்டிருந்த கலங்கரை விளக்கம், ஆருவது அதிசயமாகக் கருதப்படுகிறது. அக்கலங்கரை விளக்கக் கோபுரம் மாடிக்கு மேல் மாடியாக உயரத்தில் மாளிகைகள் அடுக்கி வைக்கப்பட்டிருப்பது போலக் கட்டப்பட்டிருந்தது. அதன் உச்சியில் இரவு பகல் இடைவிடாமல் எரியுமாறு விறகுகள் குவித்து எரிக்கப்பட்டன. நெடுந்தொலையில் கடலில் வரும் கலங்களுக்கு வழி காட்டியாய் அமைய வேண்டுமென்னும் கருத்துடன் **பிலெடல்பஸ்** என்ற 'எகிப்து மன்னன் அதை அமைத்தான். அந்த அதிசயம் இன்றில்லை;

கி. பி. பதின்மூன்றும் நூற்றுண்டு முடிவதற்குள் சிதைந்துவிட்டது.

12. **ரோட்ஸ் துறைமுகத்தில் இருந்த 'கொலாசஸ்'** என்னும் மிகப் பெரிய **அப்போலோ உருவச் சிலை** ஏழாவது அதிசயமாகக் கருதப்படுகிறது. அந்-




நகர மக்களின் கடவுள் பெயர் **அப்போலோ** என்பது. ஒரு முறை ரோட்ஸ் நகர மக்கள்மீது மற்ருெரு மன்னன் படையெடுத்தான். ரோட்ஸ் மக்கள், அவனை எதிர்க்க மாட்டாமல், தங்கள் கடவுளிடம் முறையிட, அக்கடவுள் படை எடுத்த மன்னனைப் புறங்காட்டி ஓடச் செய்தார். இதனுல், அம்மக்கள் தங்கள் கடவுளுக்கு நூறு உருவச் சிலைகள் செய்து,

அந்நகரெங்கும் நிறுத்தி வைத்தார்கள். அவற்றுள் ஒன்று மிகப் பெரியது. வெண்கலத்தாற் செய்யப்பட்ட நூற்றிருபதடி உயரமுள்ள அச்சிலை, ரோட்ஸ் துறைமுக வாயிலில் இருந்த இரண்டு பெருந்தூண்கள் மீது கால்களை அகற்றி வைத்து நிற்பது போல அமைக்கப்பட்டிருந்தது. அது கி. மு. 224ல் ஏற்பட்ட நில நடுக்கத்தால் தகர்ந்து கடலில் விழுந்து அழிந்தது.

13. இவ்வேழு அதிசயங்களைத் தவிர, **பைசா நகரத்துச் சாய்ந்த கோபுரம்**, நம் நாட்டில் கட்டப்பட்டிருக்கும் **தாஜ் மஹால், அஜாந்தாக் குகைச் சிற்பங்கள், மாமல்லபுரத்துச் சிற்பங்கள்** முதலியவைகளும் உலக அதிசயங்களென மதிக்கத் தகுந்தவைகளே.

### பயிற்சி :

**1. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—**

அற்புதங்கள், நிகழ்த்தி வரும், துறை, கருதுவதில்லை, நிழற்படம், ஏதுமில்லை, பொதுப்பட, தோற்றமளிக்கும், பரப்பு, கல்லறை, சீர் அழிந்து, பாழாக்கிவிட்டனர், எழிலுடன், மகுடம், செங்கோல், பாதபீடம், சிற்ப எழில், கருவறை, நினைவுமண்டபம், துறைமுகம், கலங்கரை விளக்கம், முறையிட, தகர்ந்து, சிற்பங்கள்.

**2. வாக்கியங்களில் அமைக்க :—**

பயன்படும் வண்ணம், அப்போதைக்கப்போது, நிகழ்த்தி வரும், பெருகாதிருந்தும், சீரழிந்திருக்கிறபடியால், தட்டுத்தட்டாய், எழிலுடன் வீற்றிருந்த, போரிட்ட போது, இணை கூற இயலாத, பிரிவாற்றாத, முடிவதற்குள்.

**3. விடை எழுதுக :—**

(அ) உலக அதிசயங்கள் யாவை?

(ஆ) கூபு மன்னனின் புனைபெயர் யாது?

(இ) அந்தர மலர்ச்சோலை யாரால் எதன்பொருட்டு உண்டாக்கப்பட்டது?

(ஈ) தயானுதேவிக்கு எழுப்பப்பட்ட கோயிலின் பெயர் யாது?

(உ) பாரோஸ் தீவின் கலங்கரை விளக்கம் எப்போது அழிவுற்றது?

(ஊ) அப்போலோ உருவச்சிலை எவ்வாறு அழிவுற்றது?

**4.** கீழ் வருவனவற்றில் உள்ள பெயரெச்ச வினையெச்சங்களைக் கண்டு எழுதுக :—

(அ) கோவிலைக் காணச் சென்றேன்.

(ஆ) அங்கு அவன் என்னைக் கண்டு என் அருகில் வந்தான்.

(இ) நாங்கள் வெறி கொண்டு ஓடின நாயைக் கண்டோம்.

(ஈ) உட்கார்ந்திருந்த பிச்சைக்காரன் எழுந்து நின்றான்.

## இலக்கணம் :

### புணர்ச்சி :

**1.** கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) சுவர் + வலிது = சுவர் வலிது.

(2) குழை + பெரிது = குழை பெரிது.

மேலே உள்ள ஒவ்வோர் உதாரணத்திலும் இரண்டிரண்டு சொற்கள் ஒன்றுபடச் சேர்கின்றன. இவ்வாறு சொற்கள் ஒன்றோடொன்று சேர்வதே இலக்கணத்தில் புணர்ச்சி எனப்படும்.

முதல் வரிசையில் உள்ள இரண்டு சொற்களைக் கவனிக்க. முதலில் சுவர் என்னும் சொல் நிற்கிறது. அது நிலைமொழி எனப்படும். அதனோடு வலிது என்னும் சொல் வந்து புணர்கிறது. அது வருமொழி எனப்படும்.

**மனப்பாடம் செய்க :**

**புணர்ச்சியாவது, நிலைமொழியும் வருமொழியும் ஒன்றுபடப் புணர்வதாம்.**

#### இயல்பு புணர்ச்சி :

**2.** கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) மலை + வலிது = மலை வலிது.

(2) சுவர் + பெரிது = சுவர் பெரிது.

இவ்வாறு நிலைமொழியும் வருமொழியும் எவ்வித வேறுபாடும் இல்லாமல் புணர்வது, ‘இயல்பு புணர்ச்சி’ எனப்படும்.

விகாரப்புணர்ச்சி :

3. கீழ் வருவனவற்றைப் படிக்க :—

(1) பூ + செடி = பூஞ்செடி (ஞ் என்னும் எழுத்துத் தோன்றியது.)

(2) ஆல் + காய் = ஆலங்காய் (அம் என்னும் சாரியை தோன்றியது.

(3) மண் + குடம் = மட்குடம் (நிலைமொழியில் ண் என்னும் எழுத்து ட் ஆகத் திரிந்தது.)

(4) என் + தந்தை = என்றந்தை (வருமொழியில் உள்ள த் என்னும் எழுத்து ற் ஆகத் திரிந்தது.)

(5) எள் + நெய் = எண்ணெய் (நிலைமொழியில் உள்ள ள் என்னும் எழுத்தும், வருமொழியின் முதலில் உள்ள ந் என்னும் எழுத்தும் ண் ஆகத் திரிந்தன.)

(6) மரம் + வேர் = மரவேர் (நிலைமொழியில் உள்ள ம் கெட்டது.)

இவற்றால் நாம் அறிவன யாவை ?

நிலைமொழியும் வருமொழியும் புணரும்போது (1) எழுத்தாவது சாரியையாவது தோன்றும். (2) நிலைமொழியின் ஈற்றெழுத்தாவது, வருமொழியின் முதலெழுத்தாவது, அல்லது அவை இரண்டுமாவது திரியும். (3) நிலை மொழியின் ஈற்றெழுத்துக் கெடும்.

மனப்பாடம் செய்க :

தோன்றல், திரிதல், கெடுதல் ஆகிய விகாரங்களுள் ஒன்றேனும் பலவேனும் பெற்றுச் சொற்கள் புணர்வது விகாரப்புணர்ச்சி எனப்படும்.

## வல்லெழுத்து மிகும் இடங்கள் :

1. அ + பையன்—அப்பையன்.
   இ + தடி —இத்தடி

இங்ஙனம் அ, இ என்னும் சுட்டெழுத்துக்களின் முன் க, ச, த, பக்கள் வந்தால், இடையில் .வந்த எழுத்திலுள்ள மெய் தோன்றும். இவ்வாறு தோன்றுவதை இலக்கணத்தில் மிகுதல் என்று கூறுவர்.

2. அந்த + கடை—அந்தக் கடை
   இந்த + செடி —இந்தச் செடி

இங்ஙனம் அந்த, இந்த என்னும் சுட்டுத்திரிபுச் சொற்களின் முன் க, ச, த, ப வந்தால் இடையில் வந்த எழுத்திலுள்ள மெய் மிகும்.

3. அங்கு + சென்ருன்—அங்குச் சென்ருன்.
   இங்கு + கண்டான்—இங்குக் கண்டான்.
   எங்கு + பார்த்தாய்—எங்குப் பார்த்தாய்?

அங்கு, இங்கு என்னும் சுட்டுக்களுக்கும், எங்கு என்னும் வினவுக்கும் முன் க, ச, த, ப வந்தால், இடையில் வந்த எழுத்திலுள்ள மெய் மிகும்.

4. மற்ற + கால்—மற்றக் கால்
   மற்றை + தெய்வம்—மற்றைத் தெய்வம்
   மற்று + சொன்னன்—மற்றுச் சொன்னன்

மற்ற, மற்றை, மற்று என்னும் இடைச்சொற்களுக்கு முன் வரும் வல்லின மெய் மிகும்.

5. செய்ய + போனன்—செய்யப் போனன்.
   போவதாக + சொன்னன்—போவதாகச் சொன்னன்.
   திரும்பி + பார்—திரும்பிப் பார்.

வினையெச்சங்களின் முன் வரும் வல்லினம் மிகும்.

6. அவனை + பார்—அவனைப் பார்.
   பணத்தை + கொடு—பணத்தைக் கொடு.

இரண்டாம் வேற்றுமை உருபுக்குப் பின் வரும் வல்லெழுத்துக்கள் மிகும்.

7. அவனுக்கு + கொடு—அவனுக்குக் கொடு.
குளத்துக்கு + படி—குளத்துக்குப் படி

நான்காம் வேற்றுமை உருபுக்குப் பின் வரும் வல்லினம் மிகும்.

## நிறுத்தக் குறிகள் :

நாம் பேசும் போதும், படிக்கும் போதும் கேட்பவர்க்குப் பொருள் விளங்கும்படி நிறுத்திப்பேசுவதும் படிப்பதும் அவசியமாகும். அங்ஙனம் நிறுத்த வேண்டிய கால அளவு இலக்கணத்தில் கணக்கிடப்பட்டுள்ளது. இந்த அளவைக் குறிக்க இடப்படும் குறிகளே நிறுத்தக்குறிகள் எனப்படும். அவற்றுள் முக்கியமானவை காற்புள்ளி, அரைப்புள்ளி, முக்காற்புள்ளி, முற்றுப் புள்ளி என்பன.

காற்புள்ளி: ஓர் எழுவாய் பல பயனிலைகளை ஏற்கும் பொழுதும், எச்சச்சொற்றொடரின் இறுதியிலும், பொருள்களை எண்ணும் பொழுதும், மேற்கோள் குறிகட்கு முன்னும் பின்னும் 'ஆதலால்', 'ஆயினும்' என்பவை போன்ற இணைப்புச் சொற்களின் பின்னும் , இக்காற்புள்ளியை இட வேண்டும்.

அரைப்புள்ளி : ஓர் எழுவாயுடன் பல வினைக் குறை வாக்கியங்கள் வரும் பொழுது ; இத்தகைய அரைப்புள்ளி இட வேண்டும்.

முக்காற்புள்ளி : சிறு தலைப்புக்களுக்குப் பின்னும், விளக்கம் கூறுவதற்கு முன்னும் : இத்தகைய முக்காற்புள்ளி இட வேண்டும்.

முற்றுப்புள்ளி : வக்கியத்தின் முடிவிலும், சொற்குறுக்கங்களுக்குப் பின்னும், முகவரியின் முடிவிலும் . முற்றுப்புள்ளி இட வேண்டும்.

# செய்யுட்பாடங்கள்

## I. இறை வாழ்த்து

திருவே!என் செல்வமே! தேனே! வானோர்
செழுஞ்சுடரே! செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
உருவே!என் உறவே!என் ஊனே ! ஊனின்
உள்ளமே! உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவே!என் கற்பகமே! கண்ணே! கண்ணிற்
கருமணியே! மணிஆடு பாவாய் ! காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் துறைஉறையும் அமரர் ஏறே!

தேவாரம்] [திருநாவுக்கரசர்

குறிப்புரை :

திருநாவுக்கரசர், தேவாரம் பாடிய மூவருள் ஒருவர். இவருக்கு அப்பர், வாகீசர் என்னும் வேறு பெயர்களும் வழங்குகின்றன.

திருவே - அழகே, வானோர் - தேவர், செழுஞ்சுடரே - (அறியாமையகற்றும்) மிக்க ஒளி போன்றவனே, உறவே - சுற்றமே, ஊனே - உடலே, உள்ளமே - மனமே, கருவே - எண்ணமே, கற்பகமே - (வேண்டிய அனைத்தையும் அளிப்பதும் தேவலோகத்தில் உள்ளதுமான) கற்பக மரம் போன்றவனே, கண்ணிற்கருமணி - கண்ணின் கருவிழி, மணியாடு பாவாய் - கருவிழியின் இடையில் ஒளி புகுந்து செல்லும் பாவை போன்றவனே, காவாய் - பாது காப்பாயாக, அருவாய - கண்ணுக்குத் தோன்றாதவையாகிய, வல்வினை - பாவம், அமரர் ஏறே - தேவர்கட்குத் தலைவனே.

# II. அறவுரை

நல்லா(று) ஒழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற்(கு) ஒருப்படார் ;—பல்பொறிய
செங்கண் புலியே(று) அறப்பசித்தும் தின்னுவாம்
பைங்கண் புனத்தபைங் கூழ். (1)

குறிப்புரை :

நல்லாறு - நல்ல வழி, ஒழுக்கின் தலை - ஒழுக்கத்தின்கண், நல்கூர்ந்தும் - வறுமையடைந்தும், அல்லன - தகாதவற்றை, ஒருப்படார் - உடன்பட மாட்டார், பல் பொறிய - பல பொறிகளை உடைய, புலியேறு - ஆண் புலி, அறப்பசித்தும் - மிகப் பசித்தாலும், பைங்கண் - பசுமையான இடம், புனத்த - வயலில் உள்ள, பைங்கூழ் - பசுமையான பயிர்.

முற்று முணர்ந்தவ ரில்லை ; ‘ முழுவதூஉம்
கற்றனம் !’ என்று களியற்க :—சிற்றுளியாற்
கல்லுந் தகரும் ; தகரா கனங்குழாய் !
கொல்லுலைக் கூடத்தி னால். (2)

குறிப்புரை :

உணர்ந்தவர் - அறிந்தவர், களியற்க - மகிழ்ச்சியடையாதே, தகரும் - உடையும், தகரா - உடையா, கனங்குழாய் - பொற்குழை என்னும் காதணியை உடைய பெண்ணே, கொல் உலை - கொல்லன் உலைக்களம், கூடம் - சம்மட்டி.

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். (3)

குறிப்புரை :

மெய் - உடல், துஞ்சார் - தூங்கார், எவ்வெவர் தீமையும் - எவரெவர் செய்யும் தீமைகளையும், மேற்கொள்ளார் - கருதமாட்டார், செவ்வி - காலத்தின், கருமம் - (தாம் மேற்கொண்ட) தொழில்.

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் ! ' யாவரையும்
வஞ்சித்தோம் !' என்று மகிழன்மின் ;—' வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொல் !' என்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு. (4)

குறிப்புரை :

வஞ்சித்து - பிறரை வஞ்சித்து, ஒழுகும் - நடக்கும், மதியிலிகாள் - அறிவற்றவர்களே, மகிழன்மின் - சந்தோஷம் அடையாதீர்கள், வஞ்சித்த - எல்லா உயிர்களையும் ஏமாற்றியவற்றை, 'ஒருவன் எங்கும் உளன்,' என்று மாற்றிக்கொள்க. ஒருவன் - கடவுள், காணும் - நம் செயலைக் கண்டுகொள்வான், அங்கம் - உடல், குலைவது - நடுங்குவது. கொல் - அசை.

நீதி நெறி விளக்கம்.] [குமரகுருபரர்

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் ; [வேழத்தில்
பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது ;—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை, பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். (1)

குறிப்புரை :

வெட்டெனவை - வெட்டெனப் பேசப்படும் கடுஞ்சொற்கள், மெத்தெனவை - மெத்தெனப் பேசப்படும் இனிய சொற்களை, வேழத்தில் - யானையின் உடலில், பட்டு உருவும் - தைத்து உட்செல்லும், கோல் - அம்பு, பஞ்சில் - பஞ்சுப் பொதியினுள், பாயாது - உட்புகாது, நெட்டிருப்புப் பாரை - நீண்ட கடப்பாரை, நெக்கு விடா - உடையாத, பாறை - கற்பாறை.

ஆற்றுப் பெருக்கற்(று) அடிசுடுமந் நாளுமவ்வா(று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் :—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. (2)

குறிப்புரை :

பெருக்கு - வெள்ளம், அற்று - நீங்கி, அடு சுடும் அந்நாள் - பாதங்களைச் சுடும் கோடைகாலம், உலகு ஊட்டும் - மக்களுக்கு நீரை அளித்துக் காக்கும், ஏற்றவர்க்கு - இல்லை என்று இரப்பவர்க்கு, நல்ல குடி - உயர்குடி, நல்கூர்ந்தார் - வறியவர், இசைந்து- மனம் பொருந்தி.

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே ;—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை ; கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (3)

குறிப்புரை :

அரசறிய - அரசரும் அறிந்திருக்கும்படி, வீற்றிருந்த வாழ்வு - சிறப்புற்றிருந்த செல்வ வாழ்க்கை, விழும் - அழியும், அன்று + ஏ (அன்றே) அசை, ஏற்றம் - உயர்வானது, பழுது - அழிவு, பணி - தொழில்.

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே ! கேளுங்கள் :—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின்(பு) ஆரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம் ? (4)

குறிப்புரை :

கூடுவிட்டு இங்கு - இங்கு உடலை விட்டு, ஆவி - உயிர்.

நல்வழி] [ஒளவையார்

தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன் ;
வேளாள னென்பான் விருந்திருக்க வுண்ணுதான் ;
கோளாள னென்பான் மறவாதான் ; இம்மூவர்
கேளாக வாழ்த லினிது. (1)

குறிப்புரை :

தாளாளன் - முயற்சியுள்ளவன், கோளாளன் - கேட்கும் பாடங்களை மனத்திற் கொள்பவன், கேளாக - உறவினராக.

வைததனை இன்சொல்லாக் கொள்வானும், நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும், ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானும் இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார். (2)

குறிப்புரை :

வைததனை - வசை மொழியை, பெய்த - ஊற்றிய, ஊறிய கைப்பு - மிக்க கசப்பு, கட்டி - வெல்லக் கட்டி, மெய்ப்பொருள் - உண்மைப்பொருள்.

கிளைஞர்க் குதவாதான் செல்வமும், பைங்கூழ்
விளைவின்கட் போற்ரு னுழவும்,—இளையனுய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையும் இம்மூன்றும்
உள்ளன போலக் கெடும். (3)

குறிப்புரை :

கிளைஞர்க்கு - உறவினர்க்கு, பைங்கூழ் - பசுமையான பயிர், குடிமை - குடி வாழ்க்கை, கெடும் - அழியும்.

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்,—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. (4)

குறிப்புரை :

தருக்கல் - கருவமடைதல், கொன்னே - வீணில், வெகுளி - கோபம், முன்னிய - கருதிய, வெஃகும் - ஆவல் கொள்ளும், படை - ஆயுதம்.

திரிகடுகம் - சுக்கு, மிளகு, திப்பிலி, இம்மூன்றும் மனிதர் உடல் நோய் போக்க வல்லவை. இந்நூலில் உள்ள ஒவ்வொரு செய்யுளிலும் காணப்படும் மும்மூன்று பொருள்கள் மக்கள் அறி-யாமை நோயைப் போக்க வல்லன.

திரிகடுகம்] [நல்லாதனர்

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்லில் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர். (1)

குறிப்புரை :

உபகாரம் - உதவி, அல்லாத - நல்லார் அல்லாத, ஈரமில்லா - இரக்கமில்லாத, ஈந்த - செய்த.

அடக்கம் உடையார் அறிவிலர் என்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா ;—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி இருக்குமாம் கொக்கு. (2)

குறிப்புரை :

கடக்க - வெல்ல, கருத - எண்ண, மடைத்தலையில் - நீர் பாயும் வாய்க்கால் மடையிடத்தில், உறுமீன் - பெரிய மீன்.

சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாம்அவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்:—மாந்தர்
குறைக்குந் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம். (3)

குறிப்புரை :

சாந்தனையும் - இறக்கும் வரையும், ஆந்தனையும் - தம்மால் முடியும் வரையில், குரைக்கும் தனையும் - வெட்டும் வரையில்.

சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா(து) ; ஆதலால்,—தந்தம்
தனம்சிறியர் ஆயினும் தார்வேந்தர் கேட்டால்
மனம்சிறியர் ஆவரோ மற்று ? (4)

குறிப்புரை :

மென்குறடு - மென்மையான கட்டை, கந்தம் - மணம், தனம் - பொருள், 'மற்று' என்பது அசை.

மூதுரை] [ஔவையார்

## III. கதைச்செய்யுள்

### 1. தாய் தந்த வழித்துணை

நாசிக தேயந் தன்னில்
நண்ணிய **தத்தன்** என்பான்,
'தேசிகன் கருமம் முற்றச்
செல்வனே ரூர்க்கெ'ன் றேத,
ஏசுறு அன்னை, 'நீநற்
றுணையொடும் ஏகு'கென்றுள்;
'பேசுறுந் துணையின்'றென்னப்
பின்னுமவ் வன்னை யெண்ணி (1)

அலவனைக் கலசத் துட்பெய்
தவன்கையி லளிக்கக் கொண்டு
செலும்பொழு திளைப்பா யாங்கோர்
செழுந்தரு நிழலிற் றூங்க
நலிதர விவனைத் தீண்ட
நல்லர வொன்று நண்ணிக்
கலசமுட் டலையை நீட்டக்
கர்க்கட கந்தான் கண்டே (2)

காரர வெனநி னைந்து
கடுங்கொடுக் காலி டுக்கி
மாரணஞ் செய்யப் பின்னர்
மறையவன் விழித்துப் பார்த்துப்

‘ பேரர வதனைக் கொன்ற
 தார்?’எனப் பெரிது மெண்ணித்
தேருறு பொழுது ‘ நண்டாற்
 செத்ததீ தெ’னத்தெ ரிந்தான். (3)

‘ மாதுரு வாக்கி யத்தை
 மன்னுமென் சிரத்திற் கொண்டு
போதர லாற்பி ழைத்தேன் !’
 என்றவன் புகுந்தா னென்று
தீதுளா னேதக் கேட்டுச்
 சுவர்ணசித் தியும வன்பால்
ஆதர வாகப் பேசித்
 தன்னக ரடைந்து வாழ்ந்தான். (4)

பஞ்சதந்திரப் பாடல்] [வீரமார்த்தாண்டதேவர்

குறிப்புரை :

1. தேசிகன் - குரு, முற்ற - முடிக்க, ஏசுரு - குற்றமற்ற, ஏகுக - செல்க, பேசுறும் - சொல்லுதற்கேற்ற.

2. அலவன் - நண்டு, கலசம் - சிறுகுடம், பெய்து - இட்டு, தரு - மரம், நலிதர - துன்பம் செய்ய, நல்லரவு - நல்ல பாம்பு, நண்ணி - அடைந்து, கர்க்கடகம் - நண்டு.

3. கார்அரா - கரும்பாம்பு, இடுக்கி - நசுக்கி, மாரணம் செய்ய - கொல்ல, மறையவன் - பிராமணன், தேர்உறுபொழுது - ஆராயும் போது.

4. மாதுரு - தாய், மன்னும் - நிலைபெற்ற, போதரலால் - வந்ததனுல்.

## 2. கூனியின் வருகை

**விருத்தம்**

துதித்திடும் அயோத்தி யாளும்
சொன்னமா முடிரா மற்கே
பதித்திட வேணு மென்று
பலருமார்ப் பரிக்கக் கண்டாள்,
'இதைக்கலைத் திடுவேன்!' என்று
இராமன்வில் உண்டை யாலே
கொதித்திடும் மனத்தா ளான
கூனியுந் தான்வந் தாளே.

**தரு**

(மோகன ராகம்—ஆதி தாளம்)

**பல்லவி**

கூனி வந்தாளே–பொல்லாத–கூனி வந்தாளே.

**அனுபல்லவி**

போனநாள் ராமன் செய்த பகையாற் காய்ந்து
பூனைபோ லிருந்து புலிபோலப் பாய்ந்து (கூனி)

**சரணங்கள்**

1

'அடுக்குமோ ராமனுக்கு அரசொருக் காலே?
ஆர்கொடுக் கிறார்அத்தை அறிகிறேன் மேலே!
கெடுக்கிறேன் நான்!' என்று புறக்கடத் தாலே
கிணறுவெட் டப்பூதம் புறப்பட்டாற் போலே
(கூனி)

2

பூமி பரதனுக்குத் தகும்என உரைக்க
பூவைக்கை கேசிதன் மனமதைக் கரைக்க
ராமன் பகையைநினைந் தடிவாய் நுரைக்க
நடுங்கி விழுந்தலைந்து பெருமூச் சிரைக்க (கூனி)

3

கொட்டிய பஞ்சுபோ லுடம்பெல்லாம் தளர்ந்து
கூனிக் குறுகுறுத்து வில்லைப்போ வளைந்து
'பட்டம்கட் டவொட்டு வேனோ!'என் றுளைந்து
பழைய பகையையெண்ணிப் பழமுள்ளு களைந்து
(கூனி)

4

சந்தா னதுபோய் முடங்கிய காலி
சணல்போ லேநரைத்துத் திரங்கிய தோலி
இந்திரா திதேவ ருக்கனு கூலி
இலங்கைராட் சதர்கள் குடிக்கொரு நீலி (கூனி)

இராம நாடகம்] [சீர்காழி அருணாசலக் கவிராயர்

குறிப்புரை :

காய்ந்து - கோபித்து, அத்தை - அதை, புறக்கடத்தால் - பின் வாயிலால், பூவை - நாகணவாய்ப் பறவை, குறுகுறுத்து - முணு முணுத்து, உளைந்து - வருந்தி, அனுகூலி - சகாயம் செய்பவன், நீலி - பழிகாரி.

---

# அகராதி

### அ

அகழி - மதில் சூழ் கிடங்கு
அகந்தை - கர்வம்
அகக்கண் - மனக்கண்
அடவி - சிறு காடு
அணிவகுத்து - வரிசை செய்து
அணுகி - நெருங்கி
அதிபர் - எஜமானர்
அந்தாதி - முதற் பாவின் முடிபை அடுத்த செய்யுளின் முதலாகக்கொண்டு பாடப் படும் நூல்
அமைச்சர் - மந்திரி
அம்சிறை - உட்சிறகு
அயர்வுற்று - சோர்வடைந்து
அரக்கியர் - இராக்கதக்குலப் பெண்டிர்
அரங்கேற்றம் - ஒருவர் தாம் செய்த நூலைச் சபையோர் முன் காட்டி அதை வெளியிட அனுமதி பெறுதல்
அரி - சிங்கம்
அரியணை - சிங்காதனம்
அரிதாள் - அறுவடை செய்யப் பட்ட பயிரின் குறை தாள்.
அருச்சகர் - பூசாரி
அருளப்பெற்ற - கிருபை பெற்ற
அலங்காரம் - அழகு
அல்லல் - துன்பம்
அல்லும் பகலும் - இரவும் பகலுமாக
அவண் - அவ்விடம்
அவைப் புலவர் - சபைக் கவிஞர்
அழியாப் புகழ் - மறையாத கீர்த்தி
அழுக்காறு - பொறாமை
அளவளாவி - வார்த்தையாடி
அளவிறந்த - எண்ணற்ற
அறச்சிந்தை - தர்ம நினைவு
அறச்சாலை - தரும சத்திரம்
அறிவுமயம் - ஞான உருவம்
அறிமுகக் கடிதம் - இன்னார் எனத் தெரியப்படுத்தும் கடிதம்
அற்றே - அத்தன்மையதே
அற்புதச் செயல் - அதிசயச் செயல்
அற்புதங்கள் - அதிசயங்கள்

### ஆ

ஆய்தல் - ஆராய்தல்
ஆணைப்படி - கட்டளைப்படி
ஆராதனை - பூசனை
ஆயிடை - இடைப்பட்ட நிலப் பகுதி
ஆற்ருத - பொருுத
ஆற்றுவிப்பேன் - தணிவிப் பேன்

### இ

இசைதல் - சம்மதித்தல்
இடையருது - ஓயாமல்
இடையூறு - துன்பம்
இடபக்கொடி-எருது பொறித்த கொடி
இணையற்ற - ஈடில்லாத
இதிகாசம் - பழங்கதை
இயலாத செயல் - முடியாத வேலை
இயன்றவை - முடிந்தவை

இரக்கமுற்று - கருணைகொண்டு
இருமருங்கும் - இரண்டு பக்கத்திலும்
இலச்சினை - முத்திரை
இவண் - இவ்விடம்
இவர்ந்து - ஏறி
இவ்வண்ணம் - இவ்வாறு
இழந்தார் - தவறவிட்டார்
இளவல் - தம்பி
இறுதி - முடிவு
இறைவழிபாடு - ஆண்டவனைத் தொழுதல்
இறைவி - கடவுள் மாதேவி
இறையடி - கடவுள்தாள்
இறை செலுத்துதல் - கப்பம் கட்டுதல்
இற்று - அறுந்து
இன்னருள் - இனிய கருணை
இயன்றளவும் - இயன்ற வரையிலும்
இன்னல்கள் - துன்பங்கள்

ஈ

ஈடுபட்டு - தலையிட்டு
ஈண்டு - இங்கு
ஈழம் - இலங்கை
ஈருக - இறுதியாக

உ

உசாவி - ஆராய்ந்து
உடன்படல் - சம்மதித்தல்
உதாசீனம் - புறக்கணித்தல்
உபகரித்து - உபகாரம் செய்து
உரம்பெற்று - வலிமை பெற்று
உரை கல் - தேய்ப்புக் கல்
உழன்று - துன்புற்று
உறுதி - திண்மை
உறைவார் - வாழ்வார்
உன்னதமான - மேன்மையான

ஊ

ஊக்கினர் - உற்சாகப்படுத்தினர்
ஊதியம் - வரும்படி
ஊறு - இடையூறு
ஊன்றிக் கவனிப்பவர்க்கு - உற்று நோக்குவார்க்கு

எ

எஞ்ஞான்றும் - எப்பொழுதும்
எடுப்பித்தல் - உண்டாக்குதல்
எடுத்துக்காட்டு - உதாரணம்
எந்தை - தந்தை
எய்தியது - அடைந்தது
எயிறு - பல்
எழிலுடன் - அழகுடன்

ஏ

ஏதுமில்லை - ஒன்றுமில்லை
ஏந்திழை - அழகிய மங்கை
ஏவல் புரிந்து - தொழில் செய்து
ஏற்றம் - முன்னேற்றம்

ஐ

ஐயந்திரிபற - சந்தேகம் நீங்க

ஒ

ஒப்பு - சமம், சம்மதி
ஒப்பனை - அலங்கரிப்பு
ஒப்புயர்வற்ற - ஈடும் எடுப்புமில்லா
ஒருப்பட்டான் - இணங்கினன்
ஒழுக்கநெறி - நன்னெறி
ஒறுக்க - தண்டிக்க

ஓ

ஓதியுணர - கற்றுத்தெளிய
ஓரம் பேசல் - பாரபட்சம் பேசல்
ஓவியம் - சித்திரம்

க

கடமைபட்டவராவர் - முறைமை பூண்டவராவர்
கடிந்தான் - சினந்தான்

கட்டளை - உத்தரவு
கண்டசுத்தி - மனமறிந்து கூறும் பாட்டு
கண்கவரும் - கண்ணைப் பறிக்கும்
கண்ணுங் கருத்துமாய் - காரியத்தில் கவனமாய்
கண்ணுற்ற - பார்த்த
கதி - போக்கிடம்
கப்பம் - திறை ; வரி
கம்பத்துக்காரன் - நிறைந்த நிலமுடையவன்
கம்பீரமாக - மிடுக்காக
கருதினர் - எண்ணினர்
கருத்தொருமித்து - எண்ணம் ஒன்றுகி
கருதுவதில்லை - நினைப்பதில்லை
கருவறை - மூலஸ்தானம்
கர்ண பரம்பரை - செவிவழிச் செய்தி
கலங்கரை விளக்கம் - தூரத்திலுள்ள கப்பல்களுக்குக் கரையை விளக்கும் விளக்கு
கலிங்கம் - கலிங்க நாடு
கல்வெட்டு - சிலாசாசனம்
கல்லறை - சமாதி
கவளம் - சோற்று உருண்டை
கவலவேண்டா - வருந்த வேண்டா
களம் - இடம்
களிக்கலாம் - மகிழலாம்
களிறு - ஆண் யானை
களைந்து - நீக்கி
கறை - களங்கம்
கனிந்து - பழுத்து

கா

காட்டரண் - காட்டுக்காவல்
காட்சியளிக்கும் - தோற்றமளிக்கும்
காமம் - ஆசை
காரியாலயம் - செயலகம்
காவியம் - பெரியநூல்
காற்றினும் கடுகி - காற்றைவிட விரைந்து

கி

கிடப்பதற்கு - படுப்பதற்கு
கிழி - முடிச்சு

கு

குடதிசை - மேல்திசை
குடில் - குடிசை
குடிபுகுந்தார் - குடியேறினர்
குறிஞ்சி - மலையும்மலை சார்ந்த இடமும்

கூ

கூற்று - பேச்சு ; இயமன்

கை

கைகூப்பி - கரம் சேர்த்து
கைவரப்பெற்ற - திறமை யடைந்த
கைவிட்டார் - நழுவவிட்டார்

கொ

கொங்கு - தேன் ; மகரந்தம்
கொற்றம் - வெற்றி
கோநகர் - தலைநகர்
கோவில் - இறையில்லம்

ச

சதுக்கம் - நாற்சந்தி
சமயப்பிணக்கு - மதச்சண்டை
சமய சங்கம் - மதச்சங்கம்
சம்பத்து - செல்வம்

சா

சாசனம் - உடன்படிக்கை
சான்று - சாட்சி

சி

சிலைகள் - உருவங்கள்

சிவிகை - பல்லக்கு
சிறப்புப்பாயிரம் - சிறப்புரை
சிறப்பியல்பு - சிறந்த பண்பு
சின்னங்கள் - அடையாளங்கள்
சின்னாள் - சில நாட்கள்

சீ

சீயம் - சிங்கம்
சீரழிந்து - நிலைகெட்டு

சு

சுடுசொல் - கடும் வார்த்தை
சுற்றம் - உறவினர்

சூ

சூழ்ச்சி - வஞ்சனை

செ

செங்கோல் - சிறந்த ஆட்சி
செந்திரு - அழகிய செல்வம்
செயலுறும் நாள் - காரியம் நிகழும் நாள்
செருக்கு - கர்வம்
செலவு - ஊர் பிரயாணம் செல்லுதல்
செவி மடுத்தான் - காதுகொடுத்துக் கேட்டான்
செவிவழிச் செய்தி - ஆதார மற்ற செய்தி
செவ்விதின் - சீரிய முறையில்
செழியர்பிரான் - பாண்டிய மன்னன்
செறிந்த - நிறைந்த

ஞா

ஞானோபதேசம் - அறிவுரை கூறல்

த

தகர்ந்து - பெயர்ந்து
தடம் - விசாலம்
தடாகங்கள் - குளங்கள்
தடைகள் - இடையூறுகள்
தருணம் - வாய்ப்பு

த

தரைநூல் - பூமி நூல்
தமிழகம் - தமிழ்நாடு
தலம் - புண்ணிய இடம்
தலைசிறந்து - முதன்மைபெற்று
தவணை - கெடுவு
தணியாமல் - அடங்காமல்

தா

தாவரம் - மரம் செடி கொடிகள்

தி

திகழ்ந்தது - விளங்கியது
திருவடி - அழகிய பாதம்
திருநாமங்கள் - அழகிய பெயர்கள்
திருமகள்நாதன் - மகாவிஷ்ணு
தினைத்துணையும் - சிறிதளவும்
திறை - கப்பம்

தீ

தீம்புனல் - இனிய நீர்
தீக்குளிக்கும்போது - நெருப்பில் மூழ்கும்போது

து

துடித்து - அதிர்ந்து, பதைத்து
தும்பி - யானை
துறந்து - நீங்கி
துறை - வழி
துறைமுகம் - கப்பல் தங்குமிடம்

தூ

தூய்மை - மாசற்ற

தெ

தெள்ளிதின் - தெளிவாக
தென்மொழி - தமிழ்
தென்னன் - பாண்டியன்

தொ

தொகுத்து - சேர்த்து
தொல்லை - துன்பம்
தொலைவு - தூரம்
தொன்மை - பழமை
தொன்றுதொட்டு - ஆதியிலிருந்து

தோ

தோற்றுவித்தல் - உண்டாக்குதல்
தோன்றல் - தோன்றினவர்
தோரணக் கம்பம் - கொடி ஸ்தூபி
தோற்றம் - பிறப்பு

ந

நடுநாயகம் - தலைமை
நலிவுற்று - சீர்கெட்டு
நல்கிய - அளித்த
நவமணிக்குவை - நவரத்தினக் குவியல்
நறிய - நன்மணமுள்ள
நறுநெய் - மணமிக்க நெய்
நற்றிறம் - நல்ல தன்மை
நனிசிறந்த - மிகச்சிறந்த

நா

நாடாய்தல் - நாடு கண்டுபிடித்தல்
நாட்டம் - நோக்கம்

நி

நிகழ்த்திவரும் - நடத்திவரும்
நிசத்தம் - அமைதி
நிட்டை - தவம்
நிபுணர் - திறமை மிக்கவர்
நிருமாணித்தல் - தோற்றுவித்தல்
நிலாமுற்றம் - மாடியின் மேல் தளம்
நிலைநாட்டினர் - நிலையுறச் செய்தனர்
நிழற்படம் - புகைப்படம்
நினைவு மண்டபம்-ஞாபகார்த்த மண்டபம்

நீ

நீர்நிலை - குளம், குட்டை முதலிய நீர் தங்குமிடங்கள்

நு

நுட்பம் - மென்மை
நுண்ணறிவு - நுட்பபுத்தி

நெ

நெகிழவிட்டார் - தளரவிட்டார்
நெட்டுரு - மனப் பாடம்
நெய்தல்- கடலும் கடல் சார்ந்த இடமும்

நை

நையப் புடைத்தனர் - நசுங்க அடித்தனர்

ப

பணித்தார் - கட்டளையிட்டார்
பணியாற்ற - தொண்டு செய்ய
பண்டு - பழமை
பண்பாடு - குணம்
பயின்ற - கற்ற
பரப்பு - விஸ்தீரணம்
பரிசில் - வெகுமதி
பரிவாரம் - படையினர்
பருபொருள் - பெரும்பொருள்
பல்லாற்றானும் -பலவகையிலும்
பளிக்கறை - கண்ணாடி அறை

பா

பாட்டிசைத்து - செய்யுள் செய்து
பாணர் - பாடிப் பிழைப்போர்
பாதபீடம் - கால்கள் வைக்கும் பலகை

பாதுகை - பாத ரட்சை
பாலை - பயிரிடத் தகுதியற்ற நிலம்

பி

பிரதானம் - முக்கியம்
பிராயச்சித்தம் - பரிகாரம்

பீ

பீடிகை - ஆரம்பம்

பு

புத்திரசோகம்-மக்கள் வாஞ்சை
புரக்கும் - காக்கும்
புராணம் - பழைய நூல்
புலங்கொள் - அறிவுறு
புலப்படாமல் - தோன்றாமல்
புழைக்கை - துவாரமுள்ள கை
புறங்காண - முதுகிட
புனைந்தவர் - செய்தவர்

பூ

பூங்கா - பூஞ்சோலை
பூசல் - சிறுசண்டை

பெ

பெயரர் - பேரப்பிள்ளை
பெருந்தகையீர் - பெருமை யுற்றவரே
பெருமிதம் - கம்பீரம்
பெரும்பான்மை - பெரும் பாலும்

பே

பேரரசர் - மன்னர்மன்னர்
பேரிரைச்சல் - பெரும் சத்தம் ; ஆரவாரம்

பொ

பொருட்செறிவு - அர்த்தம் நிறைந்த
பொருட்படுத்து - பொருளாக மதி
பொலிவு - வனப்பு
பொறித்தார் - செதுக்கினார்
பொன்மொழி - அறிவுரை

போ

போற்றி - வணங்கி
போதகர் - போதிப்பவர்

ம

மகத்தான - உன்னதமான
மகான் - ஞானி
மகுடம் - முடி
மகோமகோபாத்தியாயர் - முது பெரும்புலவர்
மணமின்றி - வாசனையற்று
மண்டபம் - சபை கூடும் இடம்
மருதம்-வயலும், வயல் சார்ந்த இடமும்
மருட்சி - மருளுதல்
மலிந்த - சரசமான
மலையரண் - மலைக்காவல்
மறக்கற்பாலன - மறந்துவிடத் தக்கவை
மனமார்ந்த- உள்ளம் பொருந்த

மா

மாக்களிறு - பெரிய ஆண்யானை

மி

மிடுக்காக - கம்பீரமாக

மு

முதுபெரும் புலவர் - பெரும் பேராசிரியர்
முல்லை - காடும் காடு சார்ந்த இடமும்
முழங்கின - ஆரவாரம் செய்தன
முறை - நீதி
முறையிட - வேண்ட

முற்றுகை - வளைத்துக் கொள்ளுதல்
முற்பட்டனர் - முன்வந்தனர்
மும்முகப் பிரதேசம் - நதி கடலிற் கடக்குமுன் பிரியும் கிளைகளின் இடைப்பட்ட இடப்பரப்பு

மூ

மூலப் பொருள் - கச்சாப் பொருள்

மே

மேதக்க - மேன்மை தங்கிய

யா

யாப்பிலக்கணம் - செய்யுள் இலக்கணம்

வ

வஞ்சகர் - சூழ்ச்சிக்காரர்
வந்தனை - வணக்கம்
வமிசம் - மரபு
வந்துற்றது - நேர்ந்தது
வரலாறு - சரித்திரம்
வருணித்தல் - விளக்குதல்
வழித் தோன்றல் - வழியிலுதித்தவர்
வழிபறி - கொள்ளை
வளம் கொழிக்கும் - செழிமை தரும்
வளவர் - சோழர்
வள்ளல் - கொடையாளி
வற்புறுத்தினர் - கட்டாயப் படுத்தினர்
வனப்புள்ளவை - அழகுள்ளவை

வா

வாயில்கள் - நுழைமுகங்கள்
வாய்ப்பு - தருணம்
வாளாயிருந்தான் - எண்ணமற்றிருந்தான்; சும்மா இருந்தான்
வானம் பொய்த்தது - மழை பொழியவில்லை
வானுறுமதி - ஆகாயத்திலுள்ள சந்திரன்
வான் கமுகு - ஓங்கி வளர்ந்த பாக்கு மரம்
வான் வெளி - ஆகாய மாகிய வெற்றிடம்

வி

விஞ்ஞானியர் - பௌதிகம், வேதி முதலிய நூல் வல்லுநர்
விண்ணுலக மகளிர் - வானுலக மங்கையர்
விண்மறைக்கும் - ஆகாயத்தை மூடும்
விந்தைப் பொருள் - ஆச்சரியப் பொருள்
வியந்தார் - ஆச்சரிய மடைந்தார்
விருதுபெயர் - பட்டப்பெயர்
வினைஞர் - தொழில் நிபுணர்
வினைமறைக்கும் - பாபத்தை நீக்கும்
வினவியது - கேட்டது

வெ

வெகுண்டு சினந்து
வெல்லுதற்கரிது - வெற்றி கொள்ளக் கடினமானது
வெளிப்போந்து - வெளிப்பட்டு

வே

வேற்றுமை - வித்தியாசம்

வை

வைரி - பகைவன்
வைது - தூற்றி ; வசைகூறி

